تاميلي

# இஸ்லாம் பூர்த்தியாக்கப்பட்ட தினம்

# يوم إكمال الدين



அபூ இம்தாத் மஹ்தி




# இஸ்லாம் பூர்த்தியாக்கப்பட்ட தினம்

செய்யத் முஹம்மத் தீஜானி சமாவீ

தமிழில்:

அபூ இம்தாத் மஹ்தி

வெளியீடு:

*இஸ்லாமிய கலாசார நிலையம்,*
*மீராவோடை, ஸ்ரீலங்கா*



- **இஸ்லாம் பூர்த்தியாக்கப்பட்ட தினம்** (ஆய்வு)
- அபூ இம்தாத் மஹ்தி, ஓட்டமாவடி



- வெளியீடு: இஸ்லாமிய கலாசார நிலையம், மீராவோடை, ஸ்ரீலங்கா
- கணனி வடிவமைப்பு: ஹாபிஸ் கம்ப்யூட்டர் சென்டர்
- முதற்பதிப்பு: ஜனவரி 2006
- அன்பளிப்பு: 50|=

- **Islam Poorthiyakkap Patta Thinam** (Research)
- *Aboo Imthath Mahdhy, Oddamavady*



- *Published by: Islamic Cultural Centre, Meeravodai, Sri Lanka*
- *Typesetted by: Hafis Computer Centre*
- *1st edition: January 2006*
- *Prize: 50/=*

## சமர்ப்பணம்

இமாம் அலீ அவர்களுக்கும்,
இதய சுத்தியுடன் இதனைப் படிக்கும்
அனைவருக்கும்
இந்நூல் சமர்ப்பணம்

# பதிப்புரை

இஸ்லாத்தின் மிக முக்கியத்துவம் வாய்ந்த இறுதி ஹஜ் பேருரையின் உண்மை நிலைப்பாட்டை விளக்கும் இந்நூலை வெளியிடத் துணை புரிந்த எல்லாம் வல்ல அல்லாஹ்வுக்கே சர்வ புகழும் உரித்தாகுக.

அரபுலகின் பேரறிஞர்களுள் ஒருவரான கலாநிதி செய்யித் முஹம்மத் தீஜானி சமாவீ அவர்களால் எழுதப்பட்ட இந்நூலினை ஓட்டமாவடியைச் சேர்ந்த அபூஇம்தாத் மஹ்தி அவர்கள், இது ஒரு மொழி பெயர்ப்பு நூல் என்று சொல்ல முடியாத அளவுக்கு, "இஸ்லாம் பூர்த்தியாக்கப்பட்ட தினம்" எனும் பெயரில் அழகு தமிழில் சிறப்பாக மொழி பெயர்த்துள்ளார்.

எமது இஸ்லாமிய கலாசார நிலையத்தின் 5ஆவது நூலாகவும், நூலாசிரியரின் முதலாவது நூலாகவும் இந்நூல் வெளிவருகின்றது.

இந்நூல் வெளிவர உதவிய அனைத்து இஸ்லாமிய சகோதரர்களுக்கும் அச்சகத்தினருக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்வதுடன், முன்னைய எமது வெளியீடுகளுக்கு வாசகர்களாகிய நீங்கள் தந்த ஒத்துழைப்பை இதற்கும் வழங்குவீர்களென எதிர்பார்க்கின்றோம்.

**இஸ்லாமிய கலாசார நிலையம்**
**மீராவோடை.**
2005.01.10

# அணிந்துரை

அகிலத்தின் அதிபதியாம் அல்லாஹ், அவனைப் போற்றிப் புகழ்கின்றேன். அல்ஹம்துலில்லாஹ். இவ் உலகிற்கு அருட்கொடையாக அவதரித்த பெருமானார் (ஸல்) அவர்கள் மீதும், பரிசுத்த அஹ்லுல்பைத்தினர் மீதும், சத்தியத்தை ஏற்று, அசத்தியத்தை எதிர்த்து நிற்கும் அனைத்து ஆன்மாக்கள் மீதும் அல்லாஹ்வின் பேரருளும் சாந்தியும் உண்டாவதாக!

இவ் உலகிலுள்ள முஸ்லிம்களெல்லாம் நாடோடிகளாக வாழ்ந்து விட்டுச் செல்ல வந்தவர்கள். அவர்களது தொலை தூரத்துப் பயணத்தில் ஒரு சந்தி பிரியும் பாதையை அடைய வேண்டியதாயிற்று. அதன் நாலாபக்கமும் பாதைகள்; செல்லும் திசையறியா தடுமாற்றம். இந்நிலையில், எங்களையெல்லாம் தம் பக்கம் கூவி அழைக்கும் கிழக்கின் ஒலியோசை நம்மை நோக்கி விரைகிறது. மேற்கும் நம் வரவை எதிர்பார்த்து ஏங்கி நிற்கிறது. வடக்கும் தெற்கும் நம்மையெல்லாம் ஆசை காட்டி அழைத்து கூப்பாடு போட்டுக் கொண்டிருக்கிறது. இதுதான் இன்றைய முஸ்லிம்களின் கையறுநிலை. பாதை தெளிவற்ற பயணம் நம்முடையது. எனினும் நாம் அங்கேயே தங்கி விடவும் முடியாத சூழல். ஏனெனில், பயங்கரமானதும், ஆபத்துக்கள் நிறைந்ததுமானதொரு இடம் அது. எனவே, நாம் நம் இலட்சியப் பயணத்திற்கான பாதையறிந்து உடனே பயணத்தை தொடங்க வேண்டும்.

ஒவ்வொரு பிரிவினரும் தத்தமது விடயங்களை சரிகண்டு ஆத்ம திருப்தி அடைகின்றனர் என்பது

இறை வாக்கு. எனவே, யதார்த்தமும் நம்பிக்கையும் நம்பகத் தன்மையும் நிறைந்த ஒரு வழிமுறையைக் கண்டறிந்தாக வேண்டிய கூப்பாடு முஸ்லிம்களாகிய நமக்குண்டு..

தீன் விடயத்தில் நாம் காட்டும் அலட்சியப் போக்கும், கொள்கை முரண்பாடுகளை காரணம் காட்டி தீன் விடயங்களை வெறுத்தொதுக்கல் என்பன, நரக வேதனையிலிருந்து ஒருபோதும் நம்மை மீட்டெடுக்க முடியாத, அர்த்தமற்ற வாழ்வுக்கே வழிகோலும் என்பது உண்மை.

தீனின் சரியான பாதையை தெளிவோடு முறையாக அறிந்து நல்வழி நடப்பதே நம்மீதுள்ள பாரிய பொறுப்பும் கடமையுமாகும். தீனில் தெளிவைத் தேடும் நமது பயணத்தில தெளிவான பாதைக்கான வழிகாட்டி யார்? அல்குர்ஆனுக்குரிய சரியான விளக்கம் யாது? நபியவர்களின் யதார்த்தபூர்வமான வழிமுறை எது? என்பன தெரியா குழப்பகரமான சூழல் தன் சமூகத்தில் ஏற்பட்டு விடக்கூடாது என்பதை அஞ்சிய நபியவர்கள், பொருத்தமானதும் நடைமுறைச் சாத்தியமானதுமான தீர்வை நம்முன் எடுத்துக் கூறி, தம் பணியை நிறைவு செய்து, மறுவாழ்வு நோக்கிய பயணத்தைத் தொடங்கி விட்டார்கள்.

நபியவர்கள் கொண்டு வந்த அழிவே இல்லா அந்த தீனை மக்கள் மயப்படுத்தி, உயிரோட்டமுள்ளதாக மாற்றி, அதனை தலைமை தாங்கி வழிநடாத்திச் செல்வதற்காக 'இமாமத்' எனும் உயர்ந்ததொரு பதவி உருவாக்கப்பட்டு அதற்கு பொருத்தமான பன்னிரு இமாம்களும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். இவர்கள் தலைமுறை தலைமுறையாக தோன்றி தமது நேரிய சுன்னாவை நோக்கி மக்களை வழிநடத்துவர் என்பதையும் நபியவர்கள் உறுதியாகக் கூறிவிட்டார்கள்.

எனக்குப் பின்னால் நீங்கள் வழிதவறாமலிருக்க இரண்டு விடயங்களை விட்டுச் செல்கின்றேன். அவற்றை நீங்கள் பின்பற்றும் காலம் முழுவதும் வழிதவற மாட்டீர்கள் எனக்கூறி அவைகளில் முதலாவது 'அல்குர்ஆன்' மற்றையது 'அஹ்லுல்பைத்' எனத் தெளிவாகக் கூறிவிட்டார்கள்.

அத்தோடு, அல்குர்ஆனும் இவர்களைப் பற்றிக் கூறத்தவறவில்லை. 'அஹ்லுல்பைத்தினரே! அல்லாஹ் அழுக்குகளை ட்டும் உங்களைத்

தூய்மைப்படுத்திவிட்டான்' (33:33) என அஹ்லுல்பைத்தினரின் முக்கியத்துவத்தை வலியுறுத்தி விட்டது.

நபியவர்களின் தூரநோக்கின் காரணமாக தமது சமுதாயத்தை வழிநடாத்தும் பொறுப்பினை குறித்த அஹ்லுல்பைத் இமாம்களிடம் வழங்கிவிட்டுச் சென்று விட்டார்கள்.

கொலை, கொள்ளை, யுத்தபீதி, பயங்கரம், பிளவுகள் என பல்வேறு துன்பகரமான நிகழ்வுகளும் ஆட்கொண்டிருக்கும் முஸ்லிம்களின் இன்றைய துரதிஷ்ட நிலைக்கு, மேற்படி இமாம்களின் தலைமைத்துவத்தை ஏற்பதனூடாக சாவுமணி அடித்திருக்க முடியும் என்பது யதார்த்தமும் உண்மையுமாகும்.

இதனால், இன்று அமெரிக்க மற்றும் மேற்கத்திய ஏகாதிபத்தியத்திற்கு முன் நாம் தலைநிமிர்ந்து வாழும் நிலை உருவாகி இருக்கும், இஸ்லாத்தின் எதிரிகளின் அடிமைகளாகவோ, கைபொம்மையாகவோ அவர்கள் முன் கைகட்டி வாய்பொத்தி வாளாவிருக்கும் நிலையோ தேவையோ ஏற்பட்டிருக்காது.

நபியவர்கள் தமது சமுதாயத்தின் எதிர்காலம் கருதி இமாமத் விடயத்தில் உறுதியான தீர்மானத்திற்கு வந்தார்கள். அதன் முதல் அங்கமாக 'இமாமத்' நியமனம் 'கதீர்கும்' எனுமிடத்தில் சிறப்பாக நடந்தேறியது. 'கதீர்' நிகழ்வை சித்தரித்துக் காட்டும் இந்நூல் முஸ்லிம் உறவுகளுக்குப் பயனுள்ளதாக அமையுமென எதிர்பார்க்கின்றோம்.

முஸ்லிம்கள், நாம் இழந்த வழிமுறையை மீளப்பெற்று, நபியவர்களின் வழிகாட்டலை உத்தியோகபூர்வமாக அதிகாரமளிக்கப்பட்ட அஹ்லுல்பைத் இமாம்களினூடாக பெற்றுக் கொள்ளும் முயற்சியில் முழுமூச்சோடு உழைக்க அல்லாஹ் அனைவருக்கும் துணைபுரிவானாக.

**அபூ அலி முர்தஸா**

06.01.2005

# என்னுரை

"இன்றைய தினம் இஸ்லாம் மார்க்கத்தை உங்களுக்குப் பூரணமாக்கி வைத்து விட்டேன்" (சூரா மாயிதா:03)

23 வருடகால பெருமானார் (ஸல்) அவர்களின் நுபுவ்வத் பணியின் முத்திரை பதித்த நிகழ்வாகவும் இஸ்லாத்தின் சாரமாகவும் கருதப்படுவதுதான் பெருமானார் (ஸல்) அவர்கள் தமது இறுதி ஹஜ்ஜில் 'கதீர்கும்' எனுமிடத்தில் நடாத்திய பேருரையாகும். இப்பேருரையில் பெருமானார் (ஸல்) அவர்களினால் எடுத்துரைக்கப்பட்ட கருத்துகளும் கட்டளைகளும் என்றும் உலக முஸ்லிம்களால் பாதுகாக்கப்பட வேண்டியதும் பின்பற்றப்பட வேண்டியதுமாகும். இஸ்லாம் பூரணத்துவமாக்கப்பட்டதாக வாக்களிக்கப்பட்ட இத்தினத்தில் பெருமானார் (ஸல்) அவர்களினால் நிகழ்த்தப்பட்ட அதிமுக்கியத்துவம் வாய்ந்த இக்கருத்துகளும் கட்டளைகளும் தமிழில் முழுமையாக வெளிவரவில்லை என்ற முஸ்லிம்களின் மனக்குறைபாடு இந்நூல் வெளிவருவதன் மூலம் நீங்கியிருப்பது சந்தோஷமளிக்கின்றது.

இந்நூலினை நீங்களும் வாசித்துப் பயன்பெறுவதுடன், இறைவனும் இறைத்தூதரும எதிர்பார்க்கின்ற வழியில் பயணிக்க எம் அனைவருக்கும் வல்ல இறைவன் துணை புரிவானாக!

அபூ இம்தாத் மஹ்தி

*ஓட்டமாவடி*

*2006.01.25*

*பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம்*

*அல்குர்ஆன் கூறுகின்றது:*

يَا أَيُّهَا الرَّسُولُ بَلِّغْ مَا أُنزِلَ إِلَيْكَ مِن رَّبِّكَ
وَإِن لَّمْ تَفْعَلْ فَمَا بَلَّغْتَ رِسَالَتَهُ وَاللَّهُ يَعْصِمُكَ مِنَ النَّاسِ

*"தூதரே! உம்முடைய இறைவனிடமிருந்து உம்மீது இறக்கி வைக்கப்பட்டவற்றை (மக்களுக்கு) எத்தி வைப்பீராக. நீர் அதனை செய்யாவிடில் அவன் வழங்கிய தூதுத்துவப் பொறுப்பை நிறைவேற்றியவராகமாட்டீர். அல்லாஹ் உம்மை மனிதர்களின் தீங்கிலிருந்து பாதுகாப்பான்" (சூரா மாயிதா:67)*

*இந்த வசனம் இறைத்தூதர் (ஸல்) அவர்கள், இஸ்லாமிய பிரசாரத்தில் ஈடுபட்ட ஆரம்ப காலகட்டத்தில் இறங்கியதாக, சுன்னத் வல் ஜமாஅத்தைச் சேர்ந்த சில தப்ஸீர் கலை அறிஞர்கள் கூறுகின்றனர். அச்சந்தர்ப்பத்தில் நபியவர்கள், தமது பாதுகாப்புக்காக சில பாதுகாவலர்களைத் தேர்ந்தெடுத்திருந்தார்கள். இத்திருமறை வசனம் இறங்கிய போது, நபியவர்கள், தமது பாதுகாவலர்களை நோக்கி இவ்வாறு கூறினார்கள்: "நீங்கள் சென்றுவிடுங்கள்; இறைவன் என்னைப் பாதுகாக்கும் பொறுப்பை ஏற்றுள்ளான்"*

*பிறிதொரு அறிவிப்பில்;*

*"நபி (ஸல்) அவர்களோடு, பாதுகாப்புக்காக சில தோழர்கள் இருந்தார்கள். மேற்கூறப்பட்ட திருவசனம் இறங்கியதும் நபிகளார், தமது தோழர்களைப் பார்த்துக் கூறினார்கள்: 'மனிதர்களே! நீங்கள் உங்களது வேலைகளைக் கவனியுங்கள். இறைவன் என்னைப் பாதுகாப்பான்" (அப்துல்லாஹ்*

பின் ஷகீக் கூறியதாக, இப்னு ஜரீத், இப்னு மர்தவிய்யா ஆகியோர் அறிவிக்கின்றனர்.)

அபூஹுரைரா கூறுகின்றார்: "நாங்கள், நபி (ஸல்) அவர்களோடு பிரயாணங்கள் சென்றால், நபியவர்கள் ஓய்வெடுப்பதற்காக நாம் நல்ல பெரிய மரங்களைத் தேர்ந்தெடுப்போம். ஒரு முறை நபியவர்கள், தமது இடுப்பிலிருந்த வாளை மரத்தின் மீது தொங்க வைத்து விட்டு உட்கார்ந்து கொண்டார்கள். அவ்வேளை, ஒரு காபிரான மனிதன் வந்து, நபிகளாரின் வாளை எடுத்துக் கொண்டு, 'ஏ முஹம்மதே! இப்போது உம்மை என்னிடமிருந்து பாதுகாப்பவர் யார்?' என்று ஆவேசமாகக் கேட்டான். நபி (ஸல்) அவர்கள் சற்றும் தயக்கமில்லாது, 'என்னைப் பாதுகாப்பவன் அல்லாஹ்' என்று கூறினார்கள். அதைக் கேட்டதும் அதிர்ச்சியுற்ற அம்மனிதன் தன்னையறியாமலேயே கையிலிருந்த வாளைக் கீழே வைத்து விட்டான். அப்போதுதான் மேற்கண்ட வசனம் இறங்கியது" (அறிவிப்பவர்கள்: இப்னு ஹிப்பான், இப்னு மர்தவிய்யா)

ஆயிஷா நாயகி கூறுகின்றார்: "நபி (ஸல்) அவர்களுக்கு சில பிரத்தியேகப் பாதுகாவலர்கள் இருந்தார்கள். மேற்கண்ட வசனம் இறங்கியதும், நபியவர்கள் பாதுகாவலர்களைத் தவிர்த்தார்கள். அல்லாஹ் என்னைப் பாதுகாப்பான் என்று கூறினார்கள்" (திர்மிதீ, ஹாகிம், அபூநயீம்)

இப்னு அப்பாஸ் கூறுகின்றார்கள்: "நபி (ஸல்) அவர்களுக்கு சில பிரத்தியேகப் பாதுகாவலர்கள் இருந்தனர். ஒருமுறை, நபிகளாரின் பெரிய தந்தை அபூதாலிப், ஹாஷிம் குல இளைஞன் ஒருவனை நபிகளாரின் பாதுகாப்புக்காக அனுப்பி வைத்தார். அப்போது, நபிகளார், தமது சிறிய தந்தையான அபூதாலிபை நோக்கி, 'தந்தையே! இனிமேல் எனக்குப் பாதுகாவலர்களை அனுப்ப வேண்டாம். அல்லாஹ் என்னைப் பாதுகாப்பான்' என்று கூறினார்கள்" (தபரானி, அபூநயீம்)

இவ்வரலாற்றுச் சம்பவங்கள், மேற்கண்ட அல்குர்ஆன் வசனம் இறங்குவதற்கான காரணங்களாகக் குறிப்பிடப்பட்டுள்ளன. ஆயினும், அச்சம்பவங்கள், வசனநடை, விளக்கம் முதலானவற்றின் அடிப்படையில் அவ் அல்குர்ஆன் வசனத்துடன் முரண்படும் இயல்பைக் கொண்டுள்ளதை, நுணுகி ஆராயுமிடத்து அறிய முடிகின்றது. இவ்வரலாற்றுச் சம்பவங்கள் அனைத்தும், மேற்கண்ட வசனம் நபி (ஸல்) அவர்கள் இஸ்லாமிய பிரசாரத்தைத் தொடங்கிய ஆரம்ப காலகட்டத்திலேயே இறங்கியதாக

நிறுவுகின்றன. சில சம்பவங்கள், ஹிஜ்ரத்துக்கு முன்பு, அபூதாலிப் உயிருடன் இருந்த போது இவ்வசனம் இறங்கியதாக நிறுவ முனைகின்றன. இந்த ஹதீஸ்களை அபூஹுரைரா, ஆயிஷா நாயகி ஆகியோர் அறிவித்திருக்கின்றனர். ஹிஜ்ரத்துக்குப் பின்பு 8 ஆண்டுகள் கழித்து, மக்கா வெற்றியின் பின்பே இஸ்லாத்தை ஏற்ற அபூஹுரைரா இந்த நிகழ்வை அறிந்திருக்கச் சாத்தியமில்லை. அவ்வாறே, ஆயிஷா நாயகி அப்போது பிறந்திருக்கவில்லை; அல்லது அவருக்கு இரண்டு வயதும் பூர்த்தியடைந்திருக்கவில்லை. நபி (ஸல்) அவர்கள் ஹிஜ்ரத்துக்குப் பின்னர்தான் ஆயிஷா நாயகியைத் திருமணம் செய்தார்கள். ஆகவே, இவ்விருவரது அறிவிப்பிலும் பலத்த சந்தேகம் நிலவுவது இயல்பானதே.

அதேவேளை, ஏனைய அறிவிப்புகளின் அடிப்படையில், இந்த வசனம், மதீனாவில் இறங்கியது என்பதும், இதுவே அல்குர்ஆனின் கடைசி வசனம் என்பதும் பெரும்பாலான ஷீஆ, சுன்னா குர்ஆன் விரிவுரையாளர்களின் ஏகோபித்த கருத்தாக அமைந்துள்ளது.

ஜுபைர் பின் நுபைர் கூறுகின்றார்: "நான் ஹஜ்ஜுக்கு சென்றிருந்த போது, ஆயிஷா நாயகியை சந்திக்கச் சென்றிருந்தேன். அவர் என்னைப் பார்த்து, 'ஜுபைரே! நீர் சூரத்துல் மாயிதாவை ஓதுகின்றீரா?' எனக்கேட்டார். நான், 'ஆம்' என்றேன். அதற்கவர் கூறினார்: 'அதுதான் நபியவர்கள் மீது இறக்கி வைக்கப்பட்ட கடைசி அத்தியாயமாகும். ஆகவே, அதில் எவற்றை ஹலாலாக காண்கிறீர்களோ அவற்றை ஹலாலாகவும், எவற்றை ஹராமாகக் காண்கிறீர்களோ அவற்றை ஹராமாகவும் எடுத்துக் கொள்ளுங்கள்" (முஸ்னத் அஹ்மத், நஸாஈ, ஹாகிம், பைஹகீ)

"இறுதியாக இறக்கப்பட்ட அல்குர்ஆன் அத்தியாயம் சூரத்துல் மாயிதா ஆகும்" என அப்துல்லாஹ் பின் உமர் கூறியதாக அஹ்மத், திர்மிதீ ஆகியோர் அறிவித்துள்ளனர். இமாம் ஹாகிம், இதனை ஸஹீஹான ஹதீஸ் என ஏற்றுக் கொண்டுள்ளார்.

முஹம்மத் பின் கஃபி குர்துனி கூறியதாக அபூஉபைதா அறிவிக்கின்றார்: "மேற்கண்ட வசனம், நபி (ஸல்) அவர்களின் கடைசி ஹஜ்ஜான ஹஜ்ஜதுல் விதாவின் போது, அவர்கள் தமது ஒட்டகை மீது அமர்ந்து மக்காவிலிருந்து மதீனாவுக்கு வந்து கொண்டிருந்த சந்தர்ப்பத்தில் இறங்கியது"

அதிய்யத் பின் கைஸ், சம்ரத் பின் ஹபீப் ஆகியோர் கூறியதாக அபூஉபைதா மேலும் அறிவிக்கின்றார்: "சூரத்துல் மாயிதா, அல்குர்ஆனின் கடைசி அத்தியாயமாக இறக்கப்பட்டது. எனவே, அதனுடைய ஹலாலை ஹலாலாகவும், ஹராமை ஹராமாகவும் எடுத்துக் கொள்ளுங்கள்' என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்"

இவ்வாறான அனேகமான அறிவிப்புகள், மேற்கண்ட அல்குர்ஆன் வசனம், நபி (ஸல்) அவர்கள் இஸ்லாமிய பிரசாரத்தில் ஈடுபட்ட ஆரம்ப காலத்திலன்றி, அவர்கள் தமது பிரசாரத்தைப் பூர்த்தி செய்த இறுதித் தருணத்திலேயே இறங்கியது என்ற உண்மையை உறுதிசெய்கின்றன.

இமாமிய்யாக்கள், இவ்வசனம் குறித்து தெளிவான கருத்தைக் கொண்டுள்ளனர். அதாவது, சூரத்துல் மாயிதா அல்குர்ஆனில் கடைசியாக அருளப்பட்ட அத்தியாயமாகும். அதில் 67ஆம் வசனம், "தூதரே! உம்முடைய இறைவனிடமிருந்து உம்மீது இறக்கி வைக்கப்பட்டவற்றை (மக்களுக்கு) எத்தி வைப்பீராக. நீர் அதனை செய்யாவிடில் அவன் வழங்கிய தூதுத்துவப் பொறுப்பை நிறைவேற்றியவராகமாட்டீர். அல்லாஹ் உம்மை மனிதர்களின் தீங்கிலிருந்து பாதுகாப்பான்" என்பதாகும்.

நபி (ஸல்) அவர்கள், இவ்வசனத்தை 'ஆயத்துல் பலாஃக்' எனக் குறிப்பிட்டுள்ளார்கள். இந்த வசனம், துல்ஹஜ் மாதம் 18ஆம் நாள், நபி (ஸல்) அவர்களும் முஸ்லிம்களும் ஹஜ் கடமையை நிறைவேற்றி விட்டுத் திரும்பும் வழியில், 'கதீர்கும்' எனும் இடத்தில் வைத்து அருளப்பட்டது. இந்த வசனம் இறங்கிய பின்னர், நபி (ஸல்) அவர்கள், தமக்குப் பின் தமது வெற்றிடத்தைப் பூர்த்தி செய்யக்கூடிய தமது பிரதிநிதியாக, ஹஸ்ரத் அலீ அவர்களை அறிமுகம் செய்தார்கள்.

"நீர் அதனை செய்யாவிடில் அவன் வழங்கிய தூதுத்துவப் பொறுப்பை நிறைவேற்றியவராகமாட்டீர்" என்ற அல்லாஹ்வின் கூற்று, நபி (ஸல்) அவர்களின் தூதுத்துவப் பணி இத்தோடு நிறைவுறுகின்றது; அல்லது முடியும் தறுவாயில் உள்ளது; அல்லது பூர்த்தியடைய இன்னும் ஒரு விடயம் மாத்திரம் உள்ளது; அதனை எத்திவைக்காத வரை தூதுத்துவப்பணி பூர்த்தியடைய மாட்டாது என்ற கருத்தைக் குறித்து நிற்கின்றது. இவ்வசனம், நபி (ஸல்) அவர்களின் கடைசி கால கட்டத்திலேயே இறங்கியது என்பதை இக்கருத்து உறுதிப்படுத்துகின்றது.

தவிரவும், இமாமிய்யா அறிஞர்களின் கூற்றிற்கொப்ப, சுன்னத் வல்ஜமாஅத் அறிஞர்களில் பலரும் மேற்படி வசனம், கதீர்கும் எனுமிடத்தில், இமாம் அலீ தொடர்பாகவே இறங்கியது என்பதை ஏற்றுக் கொண்டுள்ளனர்.

இவ்வாறு ஏற்றுக் கொண்டுள்ள சுன்னத் வல்ஜமாஅத்தினரில் சிலரை இங்கு குறிப்பிடுகின்றோம்:

*01. அல்ஹாபிழ் அபூநயீம் (நுஸூலுல் குர்ஆன்)*

*02. இமாம் வாஹிதி (அஸ்பாபுந் நுஸூல், பக்:150)*

*03. அபூ இஸ்ஹாக் தஃலபி (தப்ஸீர் அல்கபீர்)*

*04. ஹாகிம் ஹஸ்கானி (சவாஹிது அத்தன்ஸீல் லிகவாயிதி அத்தப்ஸீர், பாகம்:1 பக்:187)*

*05. ஜலாலுத்தீன் சுயூதி (அத்துர்ருல் மன்தூர் - அத்தப்ஸீர் பில் மஃதூர் பாகம்:3 பக்:117)*

*06. பஹ்ரு ராசி (தப்ஸீர் அல்கபீர், பாகம்:12 பக்:50)*

*07. முஹம்மத் அப்துஹ் (தப்ஸீர் அல்மனார் பாகம்:2 பக்:86)*

*08. இப்னு அசாகிர் (தாரீஹ் தெமஸ்க்)*

*09. சூகானி (பத்ஹுல் கதீர், பாகம்:2 பக்:60)*

*10. கன்தூசி (யனாபீஉல் மவத்தா, பக்:120)*

*11. சஹ்ரிஸ்தானி (அல்மிலல் வந்நிஹல், பாகம்:1 பக்:163)*

*12. இப்னு ஜரீர் தபரீ (கிதாப் அல் விலாயா)*

*13. இப்னு சாஜிஸ்தான் (கிதாபுல் விலாயா)*

*14. பத்ருத்தீன் ஹனபீ (உம்ததுல் காரி ஃபீ சரஹில் புஹாரி, பாகம்:8 பக்:584)*

*15. ஆலூசி (ரூஹுல் மஆனி, பாகம்:2 பக்:384)*

*16. ஹம்வீனி (பராயிது சிம்தைன், பாகம்:2 பக்:384)*

*17. சித்தீக் ஹஸன்கான் (பத்ஹுல் பயான் ஃபீ மகாசிதில் குர்ஆன், பாகம்:3 பக்:63)*

அல்லாஹ்வினால் கட்டளையிடப்படுகின்ற அவ்விடயம் மிக முக்கியமானது என்பதை அறிந்திருந்த நபி (ஸல்) அவர்கள், அந்த விடயத்தை முஸ்லிம் சமூகம் எவ்வாறு அணுகும் என்ற தயக்கம் கொண்டிருந்தார்கள். மறுபுறம் இவ்விடயத்தை மற்றொரு சந்தர்ப்பத்தில் சொல்லக்கூடியவாறு அல்லாஹ்வினால் அவர்களுக்கு அவகாசம் வழங்கப்பட்டிருக்கவுமில்லை.

நபி (ஸல்) அவர்கள், தமது வாழ்க்கை முடிவை அண்மித்துக் கொண்டிருந்தார்கள். "இந்த வருடத்திற்குப் பிறகு உங்களை நான் சந்திக்க முடியாது போகலாம். மிக விரைவில் அல்லாஹ்வின் அழைப்புக்கு நான் பதிலளிக்க வேண்டியுள்ளது" என அவர்கள் ஹஜ்ஜின் இறுதியில் மக்கள் முன்னிலையில் குறிப்பிட்டிருந்தார்கள்.

எனவே, பிறிதொரு சந்தர்ப்பத்தில் அவ்விடயத்தைப் பற்றி மக்களுக்குக் கூறுவதற்கு அவர்களுக்கு அவகாசம் இல்லை. அதுமட்டுமன்றி, நபிகளாரது இறுதி ஹஜ்ஜில் இலட்சக்கணக்கான தோழர்கள் ஒன்றுகுழுமியிருந்தார்கள். ஹஜ்ஜை முடித்து ஒரு வாரம்தான் சென்றிருந்தது. எல்லோரும் தத்தம் இருப்பிடங்களுக்குச் செல்வதற்கான ஆயத்தங்களில் இருந்தனர். அல்லாஹ்வின் அத்தாட்சிகளால் தோழர்களின் உள்ளங்கள் ஆன்மீகப் புத்துணர்ச்சி பெற்றிருந்தன. இந்நிலையில் அவ்விடயத்தை பகிரங்கப்படுத்துவது பொருத்தமாகவும் இருந்தது.

முஸ்லிம்கள் அனைவரும் 'கதீர்கும்' எனும் இடத்தில் நின்று கொண்டிருந்தனர். இங்கிருந்து அவர்கள் பிரிந்து செல்ல வேண்டியிருந்தது. ஹஜ்ஜை முடித்துக் கொண்டு தமது இருப்பிடங்களுக்குச் செல்லத் தயாராகிக் கொண்டிருக்கும் முஸ்லிம்கள், தமது நபியை இதற்குப் பிறகு நேரடியாக, அல்லது இவ்வாறான பெரும் கூட்டத்துடன் காண முடியாது போகலாம்.

ஆகவே, நபி (ஸல்) அவர்கள் இந்த அரிய சந்தர்ப்பதை ஒரு போதும் கைநழுவ விடுவதில்லை எனத் தீர்மானித்தார்கள். மறுபுறம், அல்லாஹ்வின் வஹியும் கட்டளையாக மட்டுமன்றி எச்சரிக்கையுடன் இறங்கியுள்ளது. நபியவர்கள், இதற்கு முன்னர் மேற்கொண்ட பிரசாரப் பணிகள் அனைத்தினதும் வெற்றியும் பூர்த்தியும், தற்போது சொல்லவிருக்கின்ற விடயத்தை எத்திவைப்பதிலேயே தங்கியுள்ளது என அல்லாஹ் வலியுறுத்திவிட்டான். அதேவேளை, மனிதர்களின் தீங்கிலிருந்து

நபிகளாரைப் பாதுகாக்கும் பொறுப்பை தான் ஏற்றுக் கொண்டுள்ளதாக அல்லாஹ் அறிவித்து விட்டான். இந்நிலையில், குறித்த விடயத்தை மக்களுக்கு முன்னிலையில் வெளிப்படுத்தும் தருணம் நபியவர்களுக்கு வந்து விட்டது.

நபி (ஸல்) அவர்கள் எவருக்கும் அஞ்ச வேண்டியதில்லை. தமது கட்டளையை மக்கள் புறக்கணிப்பார்களோ என்று ஐயமுறத் தேவையில்லை. தமக்கு முன்பிருந்த நபிமார்களை அவர்களது சமூக மக்கள் பொய்யாக்கி வந்தார்கள். ஆனாலும், நபியவர்களுக்கு இவ்விடயத்தை பகிரங்கப்படுத்துவதில் எவ்விதத் தடையும் இப்போது இருக்கவில்லை. அல்லாஹ்வின் கூற்றின் பிரகாரம் அவர்களில் அதிகமானோர் உண்மையை ஏற்கமாட்டார்கள் என்றிருந்தும், தமது தூதுத்துவப் பணியைப் பூர்த்தி செய்வதற்காக அதனை வெளிப்படுத்த வேண்டிய தேவை நபியவர்களுக்கு இருந்தது.

நபி (ஸல்) அவர்களுக்கு முன்பு தோன்றிய பல நபிமார்களை, அவர்களது சமூகத்தினர் பொய்யாக்கியதை, அல்லாஹ் நபியவர்களுக்கு இவ்வாறு குறிப்பிட்டிருந்தான்:

وَإِن يُكَذِّبُوكَ فَقَدْ كَذَّبَتْ قَبْلَهُمْ قَوْمُ نُوحٍ وَعَادٌ
وَثَمُودُ ﴿٤٢﴾ وَقَوْمُ إِبْرَاهِيمَ وَقَوْمُ لُوطٍ ﴿٤٣﴾ وَأَصْحَابُ مَدْيَنَ وَكُذِّبَ
مُوسَىٰ فَأَمْلَيْتُ لِلْكَافِرِينَ ثُمَّ أَخَذْتُهُمْ فَكَيْفَ كَانَ نَكِيرِ ﴿٤٤﴾

"நபியே! இறை நிராகரிப்பாளர்களான அவர்கள் உம்மை பொய்யர் எனத் தூற்றுகின்றனர் எனில் அவர்களுக்கு முன்னர் நூஹின் சமுதாயத்தினரும், ஆத், ஸமூத் கூட்டத்தார்களும், இப்ராஹீமினதும், லூத்தினதும் சமூகத்தினர், மற்றும் மத்யன் வாசிகள் ஆகிய அனைவரும், (தமது நபிமார்களை) பொய்யாக்கினர். மூஸாவும் பொய்யாக்கப்பட்டுள்ளார். சத்தியத்தை நிராகரித்த இவர்கள் அனைவருக்கும் நாம் முதலில் சிறிது அவகாசம் கொடுத்தோம். பின்னர் அவர்களை பிடித்துக் கொண்டோம். எனது தண்டனை எப்படி இருந்தது என்று (பாருங்கள்)" (சூரா ஹஜ்:42)

எனவே, தமக்கு விதிக்கப்பட்ட கடமையை நிறைவேற்றும் பொருட்டு நபி (ஸல்) அவர்கள் பக்குவமாகச் செயற்பட்டார்கள். நபியவர்கள், கதீர்கும் எனுமிடத்தில் ஹஜ்ஜுக்குச் சென்று திரும்பிய அனைவரையும் ஒன்றுசேர்த்து நீண்ட ஒரு குத்பாவை நிகழ்த்தினார்கள். தமது நபித்துவப் பணியையும், தலைமைத்துவக் கடமையையும் குறையின்றி தாம் செய்தமைக்கான சான்றை மக்களிடம் உறுதிமொழியாகப் பெற்றார்கள். மக்கள் அனைவரும், நபியவர்களது பணியை அங்கீகரித்து, 'நபியே! தாங்கள் தங்களது பணியை முழுமையாக நிறைவேற்றினீர்கள்' என்று உறுதிகூறினார்கள்.

அதன் பிறகு நபி (ஸல்) அவர்கள் இமாம் அலீயை தம்மருகில் அழைத்து, அவர்களது கையைப் பற்றி உயர்த்தியவாறு மக்களைப் பார்த்து இவ்வாறு கூறினார்கள்: "நான் யாருக்கெல்லாம் தலைவராக இருந்தேனோ, அவர்களுக்கு இனி அலீயே தலைவராவார்"

பின் "யாஅல்லாஹ்! இவரை யாரெல்லாம் நேசிக்கின்றனரோ அவர்களை நீயும் நேசிப்பாயாக. இவரை யாரெல்லாம் வெறுக்கின்றனரோ அவர்களை நீயும் வெறுப்பாயாக. யாரெல்லாம் அவருக்கு உதவி புரிகின்றனரோ அவர்களுக்கு நீயும் உதவி புரிவாயாக. யாரெல்லாம் அவருக்கு உதவாது விலகிச் செல்கின்றனரோ அவர்களை நீ இழிவுபடுத்திவிடுவாயாக. உண்மையை எப்போதும் அவருடன் இருக்கச் செய்வாயாக" என்று அல்லாஹ்விடம் பிரார்த்தித்தார்கள்.

அதன்பின், நபி (ஸல்) அவர்கள், தமது தலைப்பாகையை இமாம் அலீ அவர்களுக்கு அணிவித்தார்கள். புதிய தலைவர் இமாம் அலீக்கு வாழ்த்துத் தெரிவிக்குமாறு ஸஹாபாக்களை வேண்டிக் கொண்டார்கள். அங்கு கூடிநின்ற ஸஹாபாக்கள் மகிழ்ச்சியுடன் முன்வந்து இமாம் அலீக்கு வாழ்த்துத் தெரிவித்து, அவர்களது நியமனத்தை ஏற்று பைஅத்தும் செய்தார்கள்.

அபூபக்கர், உமர் போன்றோர் ஏனைய ஸஹாபாக்களை விட முந்திக்கொண்டு இமாம் அலீக்கு வாழ்த்துத் தெரிவித்தனர். "அபூதாலிபின் புதல்வரே! உங்களுக்கு எமது வாழ்த்துக்கள். நீங்கள் எமக்கும், முஃமினான ஆண்கள், பெண்கள் அனைவருக்கும் தலைவராக ஆகிவிட்டீர்கள்" என்று வாழ்த்தினார்கள்.

*(01. அஹ்மத் பின் ஹம்பல், முஸ்னத் அஹ்மத் - பக்கம்:231 பாகம்:4)*

*(02. இமாம் தபரீ, தப்ஸீருத்தபரி)*

*(03. இமாம் பஹ்ர் அர்ராசி, தப்ஸீருல் கபீர் - பக்கம்:636 பாகம்:3*

நபி (ஸல்) அவர்கள், அல்லாஹ்வின் கட்டளைப்பிரகாரம், இமாம் அலீ அவர்களை தமக்குப் பின் கலீபாவாக நியமித்துவிட்டார்கள். தமது தூதுத்துவப் பணியைப் பூர்த்தி செய்து விட்டார்கள். தமக்கு விதிக்கப்பட்டிருந்த இஸ்லாமிய பிரசாரத்தில் எஞ்சியிருந்த அந்த ஒரு விடயத்தையும் பகிரங்கப்படுத்தி விட்டார்கள். இந்த உடன்படிக்கை நிகழ்வு நடந்து முடிந்த பின்பு, அல்லாஹ் பின்வரும் வசனத்தை இறக்கி வைத்தான்.

“இன்று, உங்களுக்காக உங்களது மார்க்கத்தைப் பூர்த்தியாக்கி விட்டேன்; எனது அருட்கொடைகளையும் முழுமைப்படுத்திவிட்டேன். உங்களுக்காக இஸ்லாம் மார்க்கத்தை திருப்தி கொண்டேன்” (சூரா மாயிதா:3)

இதன்படி, நபி (ஸல்) அவர்கள் தமக்குப் பின், முஸ்லிம் சமூகத்தை வழிநடாத்தும் பொறுப்பை, அல்லாஹ்வின் கட்டளைப்பிரகாரம், இமாம் அலீ அவர்களுக்கு ஒப்படைத்தார்கள். எனவே, நபி (ஸல்) அவர்களுக்குப் பின் முஸ்லிம் சமூகத்தின் தலைவர் இமாம் அலீ அவர்களேயாவார்.

இதுவே இமாமிய்யாக்களின் நம்பிக்கையும் கோட்பாடுமாகும். மேற்படி நிகழ்வு பற்றிய அறிவிப்பும், அங்கீகாரமும் சுன்னத் வல்ஜமாஅத்தாரிடத்திலும் காணப்படுகின்ற போதிலும், கொள்கை ரீதியான அவர்களது நடைமுறைகளில் அவை வெளிப்படுவதில்லை. இவ்வகையில், சுன்னத் வல்ஜமாஅத் அறிஞர்களிடத்தில் இது தொடர்பாகப் பதியப்பட்டுள்ள சில ஹதீஸ்கள் கீழே குறிப்பிடப்படுகின்றன.

01) இமாம் அஹ்மத் பின் ஹம்பல், தமது முஸ்னத் அஹ்மத் கிரந்தத்தில் பின்வரும் ஹதீஸை பதிவு செய்துள்ளார்: ஸைத் பின் அர்க்கம் அறிவிக்கின்றார்: “நாங்கள், நபி (ஸல்) அவர்களுடன் கதீர் எனும் ஓரிடத்தில் ஒன்றுகூடினோம். தொழுவதற்கான அழைப்பு விடுக்கப்பட்டது. நபியவர்களுடன் இணைந்து நாம் தொழுதோம். பின்பு நபியவர்கள், வெயில் படாதவாறு உயர்த்திக் கட்டப்பட்டிருந்த துணிக்குக் கீழ் நின்றவாறு எமக்கு பிரசங்கம் செய்தார்கள். ‘நான் ஒவ்வொரு

முஃமினுக்கும் அவனது உயிரை விடவும் மேலானவன் இல்லையா?' என்று எம்மைப் பார்த்துக் கேட்டார்கள். நாங்கள், 'ஆம், நீங்கள் எங்களது உயிரை விடவும் மேலானவர்கள்' என்று கூறினோம். அப்போது நபியவர்கள் சொன்னார்கள்: "நான் யாருக்கெல்லாம் தலைவராக இருந்தேனோ, அவர்களுக்கெல்லாம் இனி அலீயே தலைவராக இருப்பார். அவரை நேசிப்பவர்களை அல்லாஹ் நேசிப்பானாக. அவரை வெறுப்பவர்களை அல்லாஹ்வும் வெறுப்பானாக"

02) இமாம் நஸாஈ, தமது கஸாயிஸ் எனும் நூலில் பின்வரும் ஹதீஸை பதிவு செய்துள்ளார்: ஸைத் பின் அர்க்கம் அறிவிக்கின்றார்: "நபி (ஸல்) அவர்கள் ஹஜ்ஜத்துல் விதாவிலிருந்து திரும்பும் போது, கதீர் எனுமிடத்தில் பயணத்தை நிறுத்தி, ஒரு மரத்துக்கு அருகாமையில் ஒன்றுகூடுமாறு உத்தரவிட்டார்கள். பிறகு சொன்னார்கள்: 'நான் விரைவில் அல்லாஹ்வின் அழைப்புக்கு பதிலளிக்க வேண்டியுள்ளது. நிச்சயமாக நான் உங்கள் மத்தியில் இரண்டு விடயங்களை விட்டுச் செல்கின்றேன். அவை ஒன்றை விட ஒன்று பெரிதானது. ஒன்று இறைவேதம் அல்குர்ஆன்; மற்றையது எனது குடும்பத்தினராகிய அஹ்லுல்பைத். எனவே, இவ்விரு விடயங்களிலும் நடந்து கொள்ளும் முறை பற்றி நீங்கள் மிக அவதானமாக இருங்கள். நிச்சயமாக மறுமையில் ஹவ்ளுல் கௌஸரை அடையும் வரை, இவ்விரண்டும் ஒன்றையொன்று பிரியமாட்டாது' இவ்வாறு கூறிய பின் நபியவர்கள் தமது உரையைத் தொடர்ந்தார்கள்: 'அல்லாஹ் எனது தலைவன்; நான் அனைத்து முஃமின்களினதும் தலைவன்' இவ்வாறு கூறிய நபியவர்கள், இமாம் அலீயின் கையைப் பிடித்து உயர்த்தியவாறு, 'நான் யாருக்கெல்லாம் தலைவராக இருந்தேனோ, அவர்களுக்கெல்லாம் இனி அலீயே தலைவராக இருப்பார். யாஅல்லாஹ்! எவர்களெல்லாம் அலீயுடன் அன்பு வைக்கின்றனரோ அவர்களை நீ நேசிப்பாயாக. எவர்களெல்லாம் அவரை பகைமை பாராட்டுகின்றனரோ அவர்களுடன் நீயும் பகைமை பாராட்டுவாயாக!' என்று பிரார்த்தித்தார்கள்"

இந்த அறிவிப்பை ஸைத் பின் அர்க்கம் அறிவித்த போது, அங்கிருந்த அபூதுபைல் என்பவர், ஸைதை நோக்கி, "நபி (ஸல்) அவர்கள் இவ்வாறு கூறியதை நீங்கள் உங்கள் காதுகளால் கேட்டீர்களா?" என வினவினார். அதற்கு ஸைத் பின் அர்க்கம், "நான் மட்டுமல்ல, அன்றைய தினம் அந்த மரத்தின் கீழிருந்த அனைவரும் கண்களால் கண்டும் காதுகளால்

செவிமடுத்தும் அவ்விடயத்தை உறுதிப்படுத்திக் கொண்டார்கள்" என்று கூறினார்.

03) இமாம் ஹாகிம் நைஸாபூரி அவர்கள், இமாம் புஹாரி மற்றும் இமாம் முஸ்லிம் ஆகியோரினால் ஏற்றுக் கொள்ளப்பட்ட பின்வரும் ஹதீஸை தனது கிரந்தத்தில் பதிவு செய்துள்ளார்:

ஸைத் பின் அர்க்கம் அறிவிக்கின்றார்: "நபி (ஸல்) அவர்கள், ஹஜ்ஜத்துல் விதாவை முடித்துக் கொண்டு திரும்பும் வழியில், கதீர் எனுமிடத்தில் ஒரு மர நிழலின் கீழ் மக்களனைவரையும் ஒன்றுகூட்டினார்கள். அவர்களுக்கு முன்னிலையில் உரையாற்றினார்கள்: 'அல்லாஹ் என்னை அழைக்கின்றான். நான் மிக விரைவில் அவனது அழைப்புக்கு பதிலளிக்க வேண்டியுள்ளது. நிச்சயமாக நான் பெறுமதி மிக்க இரு விடயங்களை உங்கள் மத்தியில் விட்டுச் செல்கின்றேன். அவற்றில் ஒன்று மற்றையதை விட மேலானது. எனக்குப் பின் அவ்விரண்டுடனும் எவ்வாறு நடந்து கொள்கின்றீர்கள் என்பதைக் கவனித்துக் கொள்ளுங்கள். நிச்சயமாக அவ்விரண்டும், மறுமையில் ஹவ்ளுல் கௌஸரை வந்தடையும் வரை ஒன்றையொன்று பிரிந்துவிடாது' இவ்வாறு கூறிய நபியவர்கள், அலீயை தம்மருகில் அழைத்து, அவர்களது கையைப் பற்றி உயர்த்தியவாறு கூறினார்கள்: 'நான் யாருக்கெல்லாம் தலைவராக இருந்தேனோ, அவர்களுக்கெல்லாம் இனி அலீயே தலைவராக இருப்பார். யாஅல்லாஹ்! அவரை ஏற்றுக் கொள்பவரை நீ நேசிப்பாயாக. அவருடன் விரோதம் கொள்பவருடன் நீயும் விரோதம் கொள்வாயாக'

04) இமாம் முஸ்லிம், தமது ஸஹீஹ் முஸ்லிம் கிரந்தத்தில் பின்வரும் ஹதீஸைப் பதிவு செய்துள்ளார்:

ஸைத் பின் அர்க்கம் அறிவிக்கின்றார்: "ஒரு நாள், நபி (ஸல்) அவர்கள், மக்காவுக்கும் மதீனாவுக்கும் இடைப்பட்ட 'கும்' எனுமிடத்தில் எங்கள் மத்தியில் பேசுவதற்காக எழுந்து நின்றார்கள். அல்லாஹ்வைப் புகழ்ந்து, எமக்கு சில உபதேசங்களும் புரிந்த பின், எம்மைப் பார்த்துக் கூறினார்கள்: 'மனிதர்களே! நானும் உங்களைப் போன்ற ஒரு மனிதன். என்னை மிக விரைவில் மலக்குகள் அல்லாஹ்விடத்தில் அழைத்துச் செல்லவுள்ளனர். நானும் அவர்களின் அழைப்பை ஏற்க வேண்டியுள்ளது. எனவே, நிச்சயமாக நான் உங்கள் மத்தியில் இரண்டு பெறுமதி மிக்க பொக்கிஷங்களை விட்டுச் செல்கின்றேன். அவற்றில் முதன்மையானது

அல்குர்ஆன்; அதில் ஒளியும் நேர்வழியும் உள்ளன. எனவே, அதனைப் பற்றிப் பிடித்துக் கொள்ளுங்கள்' என்று கூறி, அல்குர்ஆன் தொடர்பாக அதிக உபதேசங்களைக் கூறினார்கள். அதன் பின் கூறினார்கள்: 'அடுத்த பொக்கிஷம், எனது குடும்பத்தினராகிய அஹ்லுல்பைத். அவர்களை மறந்து விடாதீர்கள்; அவர்களை மறந்து விடாதீர்கள்; அவர்களை மறந்து விடாதீர்கள்"

இமாம் முஸ்லிம், இச்சம்பவத்தை சுருக்கமாகக் கூறியுள்ள போதிலும், அதுவும் குறித்த விடயத்தை சரியாகப் புரிந்து கொள்ளப் போதுமானதாக உள்ளது.

ஒருவேளை, ஸைத் பின் அர்க்கம் அவர்கள், அரசியல் அழுத்தங்கள் காரணமாக கதீர் சம்பந்தமான ஹதீஸை மறைத்திருக்கக் கூடும். இதனை ஹதீஸின் கருத்துருவாக்கத்திலும் சொல்லமைப்பிலும் புரிந்து கொள்ள முடியுமாக உள்ளது.

ஸைத் பின் அர்க்கம் அவர்களிடமிருந்து இந்த ஹதீஸை அறிவித்த அறிவிப்பாளர் இவ்வாறு கூறுகின்றார்: "நான், ஹுஸைன் பின் ஸீரத், மற்றும் மூவரும் வயது முதிர்ச்சியடைந்திருந்த ஸைத் பின் அர்க்கமிடம் சென்று அவருக்கு முன்னால் அமர்ந்திருந்தோம். ஸைதைப் பார்த்து ஹுஸைன், "ஸைதே! நீங்கள் நபி (ஸல்) அவர்களை நேரடியாக சந்தித்துள்ளீர்கள். அவர்களுடன் இணைந்து பல யுத்தங்களில் பங்கெடுத்து காஃபிர்களுக்கெதிராகப் போராடியுள்ளீர்கள். அவர்களிடமிருந்து அதிக நற்பாக்கியங்களைப் பெற்றுள்ளீர்கள். எனவே, நீங்கள் நபி (ஸல்) அவர்களிடமிருந்து செவியுற்றவற்றில் சிலவற்றை எமக்கு எடுத்துக் கூறுங்கள்" என்று கேட்டார்.

அதற்கு ஸைத், "எனது சகோதரனின் மகனே! அல்லாஹ் மீது ஆணையாக, எனது வயது முதிர்ந்து விட்டது. நபி (ஸல்) அவர்களிடமிருந்து செவியுற்ற பல விடயங்களை நான் மறந்து விட்டேன். எனவே, ஏற்கனவே நான் அறிவித்துள்ள விடயங்களைப் போதுமாக்கிக் கொள்ளுங்கள். இதற்கு மேலும் என்னைச் சிரமப்படுத்தாதீர்கள்" என்று கூறிவிட்டு, பின்னர் இவ்வாறு கூறினார்: "நபி (ஸல்) அவர்கள், கும் என்ற இடத்தில் எங்களுக்கு மத்தியில் பேசுவதற்காக எழுந்து நின்றார்கள்......" என்று அச்சம்பவத்தைக் கூறினார்.

இந்த ஹதீஸிலிருந்து சில தரவுகளை நாம் பெற முடியுமாக உள்ளது. ஹுஸைன், கதீர்கும் நிகழ்வு குறித்தே கேள்வி எழுப்பியுள்ளார். சபையில் பலருக்கு மத்தியில் ஸைதை ஓர் இக்கட்டான சூழ்நிலைக்குத் தள்ளியுள்ளார். ஹுஸைன் கேள்வி கேட்பது கதீர்கும் நிகழ்வைப் பற்றித்தான் என்பதை ஸைதும் அறிந்திருந்தார். எனினும், அது பற்றி வெளிப்படையாகச் சொல்வதற்கு அச்சம் கொண்டிருந்தார்.

ஏனெனில், உமையா ஆட்சியாளர்களின் அழுத்தங்களும், இமாம் அலீயை பகிரங்கமாக மிம்பர் மேடைகளில் சபிக்கின்ற பாவச்செயல்களும், அஹ்லுல்பைத்துகளுக்கெதிரான கெடுபிடிகளும் அக்காலத்தில் பெருமளவு பரவியிருந்தன. இந்த உண்மைகளை வெளிப்படுத்துவதனால் உமையாக்களால் தனக்கும் அச்சுறுத்தல் நிகழும் என்று ஸைத் அச்சமுற்றிருந்தார்.

அதனால், அவ்விடயத்தை வெளிப்படையாகச் சொல்லத் தயங்கி, தனது மறதியையும் வயது முதிர்ச்சியையும் முன்னிறுத்தி அவ்விடயத்தைக் கூறினார். இந்நிகழ்வு பற்றி தான் ஏற்கனவே அறிவித்தவற்றையும் உறுதிப்படுத்தி, அதனை ஏற்றுக் கொள்ளுமாறும் வேண்டிக் கொண்டார்.

எனினும், 'கதீர்' என்ற பெயரைக் குறிப்பிடாது, தண்ணீர்கரை எனப் பொருள்படும் 'கும்' என்ற பெயர் குறிப்பிட்டு பொதுவாக இந்நிகழ்வு பற்றி அவர் விபரித்தார். அதன் பின், இமாம் அலீ அவர்களின் சிறப்புகளையும் உயர்வையும் குறித்துக் காட்டினார்.

'ஸகலைன்' எனும் ஹதீஸையும் குறிப்பிட்டார். கதீர்கும் நிகழ்வையும், இமாம் அலீயின் சிறப்பையும் குறிப்பிட்ட ஸைத், இவ்விரு அம்சங்களையும் ஒப்புணர்த்தி மக்களே முடிவைத் தீர்மானித்துக் கொள்ளட்டும் என்று நினைத்து, நபி (ஸல்) அவர்களுக்குப் பின்னரான இமாம் அலீ அவர்களின் தலைமைத்துவ உரிமை குறித்து வெளிப்படையாக எதுவும் சொல்லாது வாய்மூடிக் கொண்டார்.

ஏனெனில், நபியவர்களுக்குப் பிறகு முஸ்லிம் சமூகத்தின் தலைமைத்துவ உரிமை இமாம் அலீ அவர்களுக்கே உண்டு என்பதை அனைத்து முஸ்லிம்களும் நன்கறிந்திருந்தார்கள்.

எனவேதான் இமாம் முஸ்லிம் அவர்கள் கூட இந்நிகழ்வு குறித்த ஹதீஸை

இமாம் அலியின் சிறப்பு என்ற தலைப்பின் கீழ் பதிவு செய்து, மேற்படி நிகழ்வில் ஸைத் குறிப்பிட வந்த விடயம் இமாம் அலீ அவர்களின் சிறப்புகளில் ஒன்று என்பதை உறுதிசெய்கின்றார்.

கதீர் தொடர்பாக வந்துள்ள இந்த அறிவிப்பை அதிகமான சுன்னத் வல்ஜமாஅத் உலமாக்கள் அறிவித்துள்ளார்கள். திர்மிதீ, இப்னுமாஜா, இப்னு அஸாகிர், இப்னு நயீம், இப்னு அதீர், சுயூதி, இப்னு ஹஜர், இப்னு கதீர் போன்றோர் தமது கிரந்தங்களிலும், இமாம் புஹாரி தனது வரலாற்று நூலிலும் இந்நிகழ்வைப் பதிவு செய்துள்ளனர்.

இவர்கள் அனைவரும் சில சில வித்தியாசங்களுடன் ஹிஜ்ரி முதலாம் நூற்றாண்டு தொடக்கம் ஹிஜ்ரி 14ஆம் நூற்றாண்டு வரை ஒருவர் பின் ஒருவராக இந்த ஹதீஸைப் பதிவு செய்துள்ளனர். அந்த ஹதீஸைப் பதிவுசெய்த அறிஞர்களின் எண்ணிக்கை 360ஐயும் தாண்டிவிட்டது. (இது தொடர்பான மேலதிக விளக்கத்திற்கு, அல்லாமா அமீனியால் எழுதப்பட்ட 'அல்கதீர்' முதலாம் பாகத்தை பார்க்கவும்)

06) கதீர் நிகழ்வு குறித்து சுன்னத் வல்ஜமாஅத் கிரந்தங்களில் இவ்வளவு அதிகமான ஹதீஸ்கள் நிரம்பியுள்ள நிலையில், இது ஷீஆக்களால் புனையப்பட்ட ஒரு நிகழ்வு எனக் கூற முடியுமா? ஆச்சரியத்துக்குரிய விடயம் என்னவெனில், சுன்னத் வல்ஜமாஅத்தில் உள்ள சில குறிப்பிட்ட அறிஞர்களைத் தவிர ஏனையோர், இந்த ஹதீஸைக் கேட்டவுடன் அது பற்றித் தெரியாதோர் போன்று நடிக்கத் தலைப்படுகின்றனர்.

இதைவிடப் பலமான ஆச்சரியம் என்னவெனில், நபி (ஸல்) அவர்கள் தமக்குப் பிறகு முஸ்லிம் சமூகத்திற்கு தமது பிரதிநிதி எவரையும் நியமிக்கவில்லை என்றும், அப்பொறுப்பை முஸ்லிம்களின் உயர் சபையான 'ஷூரா'விடம்தான் ஒப்படைத்தார்கள் என்றும் கூறுவதாகும். ஆனாலும், அனைத்து உலமாக்களும் கதீர் தொடர்பான இந்த அறிவிப்பை ஸஹீஹ் என ஏற்றுக் கொள்கின்றனர்.

இமாம் அலீ அவர்களின் கிலாபத்தை உறுதிப்படுத்த இதைவிடத் தெளிவான அறிவிப்புகள் தேவையில்லை.

இந்தச் சம்பவத்தோடு மற்றொரு அல்குர்ஆன் வசனமும் தொடர்புபட்டுள்ளது. அவ்வசனம், கதீர் நிகழ்வை மேலும் தெளிவுபடுத்துகின்றது.

அல்லாஹ் குறிப்பிடுகின்றான்:

اَلْيَوْمَ اَكْمَلْتُ لَكُمْ دِيْنَكُمْ
وَاَتْمَمْتُ عَلَيْكُمْ نِعْمَتِيْ وَرَضِيْتُ لَكُمُ الْاِسْلَامَ دِيْنًا

"இன்றைய தினம் உங்களுக்காக உங்களுடைய மார்க்கத்தை நான் பரிபூரணமாக்கி வைத்து விட்டேன். என்னுடைய அருட்கொடைகளை உங்கள் மீது பரிபூரணமாக்கி விட்டேன். இன்னும் இஸ்லாத்தை உங்களுக்கான மார்க்கமாகத் திருப்தி கொண்டேன்" (சூரா மாயிதா:3)

இது, நபி (ஸல்) அவர்கள், கதீர் எனுமிடத்தில், இமாம் அலீ அவர்களை தமக்குப் பின் முஸ்லிம் சமூகத்திற்கான தமது பிரதிநிதியாகப் பிரகடனப்படுத்திய பின்பு இறங்கி வசனமாகும் என்பது இமாமிய்யாக்களின் ஏகோபித்த கருத்து. இதனால்தான், இமாமத்தை ஏற்றுக் கொள்வது, மார்க்கத்தின் அடிப்படை விடயம் என்ற கோட்பாட்டை அவர்கள் கொண்டுள்ளனர்.

சுன்னத் வல்ஜமாஅத் அறிஞர்களும், மேற்குறிப்பிட்ட அல்குர்ஆன் வசனம், நபி (ஸல்) அவர்கள் தமது பிரதிநிதியாக இமாம் அலீயை பிரகடனப்படுத்திய பின்புதான் இறங்கியது என்பதை ஏற்றுக் கொண்டுள்ளனர். அவர்களில் சிலரின் பெயர்கள்:

01. இப்னு அசாகிர் (தாரீஹ் தெமெஸ்க், பாகம்:2 பக்:75)

02. இப்னு மகாசிலி (அலி பின் அபீதாலிப், பக்:19)

03. கதீப் பஃக்தாதீ (தாரீஹுல் பஃக்தாத், பாகம்:8 பக்:92)

04. சுயூதி (இத்கான், பாகம்:1 பக்:13)

05. சிப்து இப்னு ஜவ்ஸி (தஸ்கிரதுல் கவாஸ், பக்:30)

06. இப்னு கதீர் (தப்ஸீர் இப்னு கதீர், பாகம்:2 பக்:14)

07. ஆலூசி (றூஹுல் மஆனி (பாகம்:6 பக்:55)

08. இப்னு கதீர் தெமஸ்கீ (அல்பிதாயா வந்நிஹாயா (பாகம்:3 பக்:213)

09. சுயூதி (தப்ஸீர் அத்துர்ருல் மன்தூர், பாகம்:3 பக்:19)

10. ஹஸ்கானி ஹனஃபீ (சவாஹிது அத்தன்ஸீல், பாகம்:1 பக்:157)

இவ்வாறு, கதீர் நிகழ்வில் நபி (ஸல்) அவர்கள் தமது பிரதிநிதியாக இமாம் அலீயை பிரகடனப்படுத்தியதற்குப் பின்னர்தான் மேற்படி வசனம் இறங்கியது என்பதற்கு இவ்வளவு ஆதாரங்களும் உறுதிப்படுத்தல்களும் இருந்தும், வேறு சிலர் இவ்வசனம் அரபா தினத்தில் இறங்கியதாக அறிவிப்புச் செய்துள்ளனர். இவ்வசனம் அரபா தினத்தில் இறங்கியது என்ற வாதத்துக்கு பின்வரும் ஆதாரங்கள் முன்வைக்கப்படுகின்றன.

இமாம் புஹாரி அவர்கள் தமது கிரந்தத்தில் பின்வருமாறு குறிப்பிடுகின்றார்: 'இவ்வாறான வசனம் எங்கள் மீது இறக்கப்பட்டிருந்தால், நாங்கள் அந்நாளை பெருநாளாக பிரகடனப்படுத்தியிருப்போம்' என்று சில யூதர்கள் சொன்னார்கள். 'அது என்ன வசனம்?' என்று உமர் பின் கத்தாப் கேட்ட போது, யூதர்கள் சொன்னார்கள்: "இன்றைய தினம் உங்களுக்காக உங்களுடைய மார்க்கத்தை நான் பரிபூரணமாக்கி வைத்து விட்டேன். என்னுடைய அருட்கொடைகளை உங்கள் மீது பரிபூரணமாக்கி விட்டேன். இன்னும் இஸ்லாத்தை உங்களுக்கான மார்க்கமாகத் திருப்தி கொண்டேன்" என்ற வசனமாகும்' அதற்கு உமர், 'இந்த வசனம் நபி (ஸல்) அவர்கள் அரபாவில் தங்கியிருந்த போது இறங்கியதாகும்' என்று கூறினார். (அறிவிப்பாளர்கள்: முஹம்மத் பின் யூசுப் சுப்பியான் - கைஸ் பின் முஸ்லிம் - தாரிக் பின் ஹிஷாம்)

ஈஸா பின் ஹாரிஸ் அன்ஸாரி கூறியதாக இப்னு ஜரீர் அறிவிக்கின்றார்: நாங்கள் ஓர் அமர்வில் இருந்தோம். அப்போது ஒரு நாஸ்திகன் எங்களிடம் வந்து, 'முஸ்லிம்களே! உங்கள் மீது இறங்கிய அந்த வசனம் எங்கள் மீது இறங்கியிருந்தால் அந்த நாளையும் நேரத்தையும் நாம் பெருநாளாகக் கொண்டாடியிருப்போம். அந்த வசனம் "இன்றைய தினம் உங்களுக்காக உங்களுடைய மார்க்கத்தை நான் பரிபூரணமாக்கி வைத்து விட்டேன். என்னுடைய அருட்கொடைகளை உங்கள் மீது பரிபூரணமாக்கி

விட்டேன். இன்னும் இஸ்லாத்தை உங்களுக்கான மார்க்கமாகத் திருப்தி கொண்டேன்" என்பதாகும்' எனக் குறிப்பிட்டான். அப்போது எங்களில் எவரும் அந்த நாஸ்திகனுக்கு பதிலளிக்கவில்லை. எனவே, நான் முஹம்மத் பின் குர்துனியை சந்தித்து அந்த விடயத்தைக் கூறினேன். அதற்கு அவர், 'நீங்கள் ஏன் உமர் பின் கத்தாப் சொன்னவற்றைக் கூறவில்லை?' என்று கேட்டார்.

அதாவது, இந்த வசனம் நபி (ஸல்) அவர்கள் அரபாவில் தங்கியிருந்த போது இறங்கியது. அதனால்தான் முஸ்லிம்கள் அதனை நினைவு கூர்ந்து அந்நாளை ஹஜ்ஜுப் பெருநாளாகக் கொண்டாடுகின்றனர் என்பது உமர் கத்தாப் அவர்களின் கருத்தாகும்.

மேற்குறிப்பிட்ட ஹதீஸில் 'நாங்கள் யாரும் அந்த நாஸ்திகனின் கேள்விக்குப் பதிலளிக்கவில்லை' என்ற அறிவிப்பாளரின் கூற்றிலிருந்து, அப்புனித தினத்தைப் பற்றி எவரும் அறிந்திருக்கவில்லை என்பது தெளிவாகின்றது. முஸ்லிம்கள் அவ்வாறான ஒரு தினத்தை ஏன் பெருநாளாகக் கொண்டாடக் கூடாது என்பதையிட்டு அறிவிப்பாளர் ஆச்சரியப்பட்டிருக்கலாம். அதனால்தான் அவர் முஹம்மத் பின் குர்துனியிடம் விடயத்தைக் கூற, அவர், உமர் பின் கத்தாப் கூறிய அந்த பதிலையே கூறும்படி ஆறுதல் கூறியிருக்கிறார்.

மேற்குறிப்பிட்ட அரபா தினம் முஸ்லிம்களிடத்தில் பிரபல்யம் வாய்ந்த நாளாக இருந்திருந்தால் நிச்சயமாக முஸ்லிம்கள் அத்தினத்தை பெருநாளாக எடுத்திருப்பார்கள். நிச்சயமாக ஹதீஸ் அறிவிப்பாளர்களும் அது விடயமாக அறிந்து வைத்திருந்திருப்பார்கள். முஸ்லிம்களுக்கு இரு பெருநாட்கள் மட்டுமே உண்டு. பிறிதொரு பெருநாள் இல்லை. அதனால்தான் இமாம் புஹாரி, இமாம் முஸ்லிம் ஆகியோர் தமது கிரந்தங்களில் 'இரு பெருநாட்கள்' எனும் தலைப்பில் ஓர் அத்தியாயத்தை ஏற்படுத்தி, அதில் ஈதுல் ஃபித்ர் (நோன்புப் பெருநாள்), ஈதுல் அழ்ஹா (ஹஜ்ஜுப் பெருநாள்) ஆகிய இரு பெருநாட்கள் பற்றிக் குறிப்பிட்டுள்ளார்கள். இதன்படி அரபா தினம் பெருநாளாக இருக்க முடியாது. ஆகவே மேற்குறிப்பிட்ட அறிவிப்புக்குப் பதிலாக பின்வரும் விடயங்களைக் கூறலாம்;

01) அந்த ஹதீஸிலிருந்து ஒரு விடயம் தெளிவாகின்றது; அதாவது, அந்த வசனத்தின் மூலம் இஸ்லாம் பூரணமடைந்து விட்டமை

உறுதிப்படுத்தப்படுகின்றது. இது முஸ்லிம்களைப் பொறுத்தவரை அவர்களது சமய நடைமுறைகளைக் கொண்ட வாழ்க்கைக்கு மிக முக்கியமான அம்சமாக அமைகின்றது. ஆயினும், இவ்வாறான ஒரு புனித தினத்தை முஸ்லிம்கள் விழா எடுக்காமல் புறக்கணித்துள்ளார்கள் என்று அறிந்த யூதர்களும் கிறிஸ்தவர்களும், 'எங்கள் மீது அவ்வாறான வசனம் ஒன்று இறங்கியிருந்தால் நாம் அதனை பெருநாளாகக் கொண்டாடியிருப்போம்' என்று கூறிய போது, அவர்களுக்கு முன்னிலையில் தாம் பலவீனப்பட்டு விடாமல் அவர்களுக்குப் பதிலளிக்க வேண்டும் என்பதற்காகவே, 'இவ்வசனம் அரபாவில் இறங்கியது' என்று உமர் பின் கத்தாப் அவர்கள் கூறியுள்ளார்கள்.

அல்லது, இந்த ஹதீஸ் முழுக்க முழுக்க புனையப்பட்ட ஹதீஸாகும். மேற்படி வசனம், அரபாவில் இறங்கியதாக அறிவிக்கப்படும் ஹதீஸில் பொய்யின் வாசத்தை நுகர முடிகின்றது. விடயத்தை வேறு பக்கம் திசை திருப்பும் முனைப்பையும் அவதானிக்க முடிகின்றது. உமையாக்கள், உமர் பின் கத்தாப் அவர்கள் அறிவிப்புச் செய்ததாக ஒரு ஹதீஸைப் புனைந்து, அதன் மூலம், கதீர் நிகழ்வையும் அதில் பகிரங்கப்படுத்தப்பட்ட இமாம் அலீ அவர்களின் சர்வதேசத் தலைமைத்துவத்தையும் முஸ்லிம்களிடமிருந்து முற்றாக மறக்கச் செய்துவிடுவதற்கு மேற்கொண்ட முயற்சியே இந்த போலி ஹதீஸ்களாகும்.

உண்மையில் கதீர் நிகழ்வு இடம்பெற்ற தினம் மிக முக்கிய தினமாகும். அது, முஸ்லிம்களின் முக்கிய பெருநாளாக இருக்க வேண்டிய ஒரு தினமுமாகும். ஏனெனில், அல்லாஹ் அத்தினத்தில் தனது மார்க்கத்தைப் பரிபூரணப்படுத்தி, தனது அருட்கொடைகளை அவர்கள் மீது பூரணப்படுத்தி, இஸ்லாத்தை அவர்களுக்கான மார்க்கமாகவும் அங்கீகரித்து ஏற்றுக் கொண்டுள்ளான்.

உமர் பின் கத்தாப் கூறியதாக அறிவிக்கப்பட்டுள்ள ஹதீஸ், மேற்படி வசனம் அரபா தினத்தில் இறங்கியதாக தெரிவிக்கிறது. அதனால் அத்தினம் பெருநாளாகக் கொண்டாடப்படுவதாகவும் கூறுகிறது. ஆனால், இது இஸ்லாமிய கலாசார நடைமுறைக்கு முரண்பட்டு நிற்கின்றது. ஏனெனில், முதலாவது பெருநாள் ரமழான் நோன்பு நோற்றபின் கொண்டாடப்படும் நோன்புப் பெருநாளாகவும், இரண்டாவது பெருநாள் துல்ஹஜ் மாதம் 10ஆம் நாள் கொண்டாடப்படும் ஹஜ்ஜுப் பெருநாளாகவும்

அமைகின்றது. அல்லாஹ்வின் இல்லமான கஃபாவை தரிசிக்கச் செல்பவர்கள், தவாஃப் செய்து, ஜம்றாவில் கல்லெறிந்து, குர்பானி கொடுத்து, தலைசிரைத்த பின்னர் தங்களது இஹ்ராமை களையும் தினம்தான் துல்ஹஜ் 10ஆம் நாளாகும். அத்தினத்தில் ஒருவருக்கொருவர் வாழ்த்துக்கள் கூறி சந்தோஷமாகவும் காணப்படுவர். அதுவே ஹஜ்ஜுப் பெருநாளாகக் கொண்டாடப்படுகிறது. ஆனால், அறபா தினம் துல்ஹஜ் 9ஆம் நாளாகும். முஸ்லிம்கள், துல்ஹஜ் 9ஆம் தினத்தையன்றி, 10ஆம் தினத்தையே பெருநாளாகக் கொண்டாடி வருகின்றனர். எனவே, மேற்படி வசனம் அரபா தினத்தில்தான் இறங்கியது என்றும், அதனால் அத்தினத்தை பெருநாளாகக் கொண்டாடுகின்றோம் என்றும் அறிவிக்கப்பட்டுள்ள ஹதீஸ் முற்றிலும் புனையப்பட்ட ஹதீஸாகும்.

எனவே, துல்ஹஜ் மாதம் 18ஆம் நாள் இடம்பெற்ற கதீர் நிகழ்வின் போதுதான் மேற்படி வசனம் இறங்கியது என்பதுதான் சரியானதும் ஏகோபித்ததுமான அறிவிப்பாகும்.

02) "இன்றைய தினம் உங்களுக்காக உங்களுடைய மார்க்கத்தை நான் பரிபூரணமாக்கி வைத்து விட்டேன். என்னுடைய அருட்கொடைகளை உங்கள் மீது பரிபூரணமாக்கி விட்டேன். இன்னும் இஸ்லாத்தை உங்களுக்கான மார்க்கமாகத் திருப்தி கொண்டேன்" என்ற வசனம், அரபாவில்தான் இறங்கியது எனக் கூறுபவர்களின் கருத்து, "தூதரே! உம்முடைய இறைவனிடமிருந்து உம்மீது இறக்கி வைக்கப்பட்டவற்றை (மக்களுக்கு) எத்தி வைப்பீராக. நீர் அதனை செய்யாவிடில் அவன் வழங்கிய தூதுத்துவப் பொறுப்பை நிறைவேற்றியவராகமாட்டீர். அல்லாஹ் உம்மை மனிதர்களின் தீங்கிலிருந்து காப்பாற்றுபவனாக இருக்கின்றான்" என்ற வசனத்துடன் ஒவ்வாமைத் தன்மையைக் கொண்டுள்ளது. ஏனெனில், இவ்வசனம் மிக முக்கியமான ஒரு விடயத்தை பகிரங்கப்படுத்துமாறு கட்டளையிடுகின்றது. அவை பகிரங்கப்படுத்தப்படவில்லையெனில் தூதுத்துவப் பணி பூரணமடையமாட்டாது என்பதையும் வலியுறுத்துகின்றது.

இவ்விரு வசனங்களும் நபி (ஸல்) அவர்களது கடைசி ஹஜ்ஜின் போது, மக்காவுக்கும் மதீனாவுக்கும் இடையிலான ஓரிடத்தில் அருளப்பட்டன. 120க்கும் அதிகமான ஸஹாபாக்களும் 360க்கு மேற்பட்ட அஹ்லுஸ்ஸுன்னா அறிஞர்களும் அதனை அறிவிப்புச் செய்துள்ளனர்.

"இன்றைய தினம்......." என்ற வசனம் அரபா தினத்தில் இறங்கியது என்ற அறிவிப்பு மிகவும் முரண்பாடான கருத்தியலைத் தோற்றுவிக்கின்றது. அவ்வாறாயின், அரபா தினத்தில் இஸ்லாத்தை பூரணப்படுத்திவிட்டதாக அறிவித்த அல்லாஹ், அதிலிருந்து ஒரு வாரத்தின் பின்பு, புதிதாக ஒரு விடயத்தை பிரசாரம் செய்யுமாறு கட்டளையிடுவதும், அதைச் செய்யவில்லையெனில் நபித்துவப் பணி பூரணமடையாது எனக் கூறுவதும் எவ்வாறு சாத்தியமாகும்! யாவும் அறிந்த ஏக வல்லோனான அல்லாஹ்விடம் இவ்வாறான தெளிவற்ற முரண்போக்கு எவ்வாறு இருக்க முடியும்! எனவே, "இன்றைய தினம்....." என்ற வசனம் அரபாவில் இறங்கியது என வாதிடுவோர் உண்மையில் அல்லாஹ்வின் வல்லமையிலும் ஞானத்திலும் ஐயத்தை எழுப்பி விடும் பெரும் பாவத்தையை இழைக்கின்றனர் எனலாம்.

03) நபி (ஸல்) அவர்கள், அரபா தினத்தில் ஒரு பேருரை நிகழ்த்தினார்கள். ஆனால், அவ்வுரையில் புதிதாக எதையும் அவர்கள் கூறவில்லை. தாம் ஏற்கனவே குறிப்பிட்ட விடயங்களையும், அல்குர்ஆனில் அல்லாஹ் குறிப்பிட்டுள்ளவற்றையுமே மக்களுக்கு மீண்டும் ஞாபகப்படுத்தினார்கள். உபதேசங்களைப் புரிந்தார்கள். தெளிவான சிந்தனையுடன் அவ்வுரையை நன்கு அவதானிப்பவர், நபிகளாரது அவ்வுரையில், மார்க்கத்தைப் பரிபூரணப்படுத்தக்கூடியதும், அருட்கொடைகளை முழுமைப்படுத்தக்கூடியதுமான புதுமையான விடயங்கள் எதுவுமன்றி, சாதாரணமாக நடைமுறையிலுள்ள, நன்கு பரிச்சயமான விடயங்களையே நபிகளார் போதித்துள்ளார்கள் என்பதை தெளிவாக விளங்கிக் கொள்வார். அரபா தினத்தில் நபி (ஸல்) அவர்கள் ஆற்றிய உரையிலிருந்து சில பகுதிகள் பின்வருமாறு;

* அல்லாஹ் இந்த மாதத்தையும், இத்தினத்தையும் சங்கைப்படுத்தியது போன்று உங்களது உயிர்களையும் உடமைகளையும் சங்கைமிக்கவையாகவும் பயனுள்ளவையாகவும் ஆக்கியுள்ளான்.

* அல்லாஹ்வை அஞ்சி வாழுங்கள். மனிதர்களின் உரிமைகளைக் குறைத்து மதிப்பிடாதீர்கள். பூமியில் குழப்பவாதிகளாக இருக்காதீர்கள். எவராவது அமானிதத்தை உங்களிடம் தந்திருந்தால் அதனைத் திருப்பி ஒப்படைத்து விடுங்கள்.

* இஸ்லாத்தின் பார்வையில் மனிதர்கள் அனைவரும் சமமானவர்களே.

அவர்களிடையே இறையச்சத்தைத் தவிர வேறெதுவும் உயர்வானதாக இருக்க முடியாது.

* அறியாமைக் காலத்தில் குடி கொண்டிருந்த கொலை வெறியாட்டத்தையும் வட்டித் தொழிலையும் தடை செய்கின்றேன்.

* அல்லாஹ்விடத்தில் மாதங்கள், 12 ஆகும். அவற்றில் 4 மாதங்கள் சங்கையானவை.

* பெண்களோடு நல்லமுறையில் நடந்து கொள்ளுங்கள்; ஏனெனில், அவர்களை இறைவனின் அமானிதமாக ஏற்று உங்களது மனைவிகளாக ஆக்கிக் கொண்டீர்கள். இறைவேதத்தைக் கொண்டு அவர்களை உங்களுக்கு ஆகுமாக்கிக் கொண்டீர்கள்.

* உங்களது அடிமைகளுடன் நீங்கள் நடந்து கொள்ளும் முறை தொடர்பாக உங்களுக்கு சில விடயங்களை வலியுறுத்துகின்றேன். நீங்கள் உண்ணும் உணவில் அவர்களுக்குக் கொடுங்கள். நீங்கள் அணியும் ஆடையில் அவர்களுக்கு அணிவியுங்கள்.

* முஸ்லிம்கள் ஒருவருக்கொருவர் சகோதரர்கள்; ஒருவரையொருவர் ஏமாற்றமாட்டார்கள்; ஒருவருக்கொருவர் துரோகம் செய்யமாட்டார்கள்; ஒருவரைப் பற்றியொருவர் புறம்பேசமாட்டார்கள்; ஒருவரது உயிர் மற்றொருவருக்கு ஹலாலாக மாட்டாது.

* ஷைத்தான், தனக்கு மனிதர்கள் வழிப்படுவதை விட்டும் இன்று நம்பிக்கை இழந்து விட்டான். அல்லாஹ்வுக்கு மிகவும் எதிரி, கொலையாளி இல்லாத ஒருவனைக் கொலை செய்பவனும், தன்னை அடிக்காத ஒருவனை அடிப்பவனுமாவர்.

* இறைவனால் கொடுக்கப்படும் அருட்கொடைகளை நிராகரிப்பவன், இறைத்தூதர் மீது இறக்கப்பட்ட விடயங்களை நிராகரித்தவனாவான். தனது தந்தை அல்லாத ஒருவரை 'அவர்தான் எனது தந்தை' என இட்டுக்கட்டுகின்ற மனிதன் மீது அல்லாஹ்வினதும் அவனது தூதரதும் அனைத்து மனிதர்களதும் சாபம் உண்டாவதாக.

* மனிதர்கள் 'லாயிலாஹ இல்லல்லாஹ்' என்று சொல்லும் வரைக்கும், என்னை இறைத்தூதர் என்று சொல்லும் வரைக்கும் அவர்களுடன்

யுத்தம் புரியுமாறு எனக்கு கட்டளையிடப்பட்டுள்ளது. எனவே, இதை யார் ஏற்று நடக்கின்றார்களோ அவர்களது உயிர் உடமைகள் எனது பாதுகாப்பில் உள்ளன. அவர்களிடம் உண்மைக்கு மாற்றமான முறையில் எதுவும் எடுக்கப்படமாட்டாது. அவர்களது விவகாரங்கள் அல்லாஹ்வுடனாகும்.

* எனக்குப் பின் ஒருவருக்கொருவர் தோள் மீது ஏறிச் செல்லும் வழிகெட்ட நிராகரிப்பாளர்களாக ஆகிவிடாதீர்கள்.

மேற்கூறப்பட்ட விடயங்களையே நபி (ஸல்) அவர்கள், தமது இறுதி ஹஜ்ஜின் அரபா தின உரையில் குறிப்பிட்டார்கள். ஸஹீஹான கிரந்தங்களிலிருந்து இவற்றைத் தொகுத்துக் கூறியுள்ளோம். இவை ஏற்கனவே அல்குர்ஆனில் குறிப்பிடப்பட்டு, நபியவர்களால் நெறிப்படுத்தப்பட்ட விடயங்களாகும்.

இவை தவிர, அவ்வுரையில் நபி (ஸல்) அவர்கள் புதிதாக வேறெதனையும் ஸஹாபாக்களுக்கு முன்வைக்கவில்லை. இஸ்லாம் என்ற மிகப்பெரும் மார்க்கம் பூரணமடைவதற்குத் தேவையான பிரதான அம்சங்களை இவ்வுரை கொண்டிருக்கவில்லை. இவ்வுரையிலுள்ள விடயங்களை மட்டுமன்றி, நபி (ஸல்) அவர்கள், இன்னும் பல மார்க்க சட்டங்களையும் நெறிகளையும் ஒழுங்குகளையும் மக்களுக்கு ஏற்கனவே போதித்திருந்தார்கள்.

எனவே, மார்க்கம் பரிபூரணமடைந்து விட்டது என்ற வசனத்திற்கும் இந்த அரபா பேருரைக்கும் இடையில் எவ்விதத் தொடர்பும் இல்லை. தமது இறுதி ஹஜ் என்பதனால், நபி (ஸல்) அவர்கள், இவ்விடயங்களை மக்களுக்கு மீண்டும் ஞாபகப்படுத்தி வலியுறுத்த வேண்டும் என்பதற்காகவே அரபா பேருரையில் இவ்விடயங்களைக் குறிப்பிட்டுள்ளார்கள்.

அதேவேளை, மார்க்கம் பூரணமடைந்து விட்டது என்ற வசனம், இமாம் அலீ அவர்களை நபியவர்கள் தமது பிரதிநிதியாக பிரகடனப்படுத்தியதற்குப் பின்னர் இறங்கியது என்ற ஹதீஸ், சிந்தனை ரீதியாகவும் நடைமுறை ரீதியாகவும் உடன்படும் போக்கைக் கொண்டதாக இருக்கின்றது.

ஏனெனில், கிலாபத் (பிரதிநிதித்துவம்) என்பது மிக முக்கியமான விடயம். நபி (ஸல்) அவர்கள், தமது வாழ்நாளில் மதீனாவை விட்டு வெளியே செல்வதாக இருந்தால், தமக்குப் பதிலாக ஒரு பிரதிநிதியை நியமித்துவிட்டே செல்வார்கள். சாதாரண பிரயாணத்துக்கே தமது பிரதிநிதியை நியமிக்குமளவு அரசியல் தூர நோக்குக் கொண்டிருந்த நபி (ஸல்) அவர்கள், தாம் மீள முடியா பயணமான மரணத்தை அடைய இருப்பதை அறிந்தும், தமக்குப் பிறகு ஒரு பிரதிநிதியை நியமிக்காது வபாத்தானார்கள் என்று கூறினால், அது எவ்வளவு மடமையான கூற்றாக அமையும்!

நபி (ஸல்) அவர்களது காலத்தில் வாழ்ந்த காஃபிர்களின் தலைவர்கள் கூட, தமக்குப் பின் தமது இனத்துக்கான தலைவரை நியமித்து விட்டுத்தான் மரணித்தார்கள். அவ்வாறிருக்க, அல்லாஹ்வினால் பரிபூரணப்படுத்தப்பட்ட, ஆளுமை மிக்க, மிகவும் உயர்வான பண்பையும் நடைமுறைகளையும் கொண்டுள்ள ஒரு மார்க்கம், நபியவர்களின் வபாத்திற்குப் பின் திட்டமிட்ட தலைமைத்துவமின்றி தனித்துவிடப்படுவது எவ்வாறு சாத்தியமாகும்! நபியவர்கள், தமக்குப் பின்னர் தமது சமூகத்தை வழிநடாத்தும் தலைமைத்துவத்தை நியமிக்காமல் மரணிப்பது எவ்வகையில் சரியான செயலாக அமையும்!

எனவேதான், அல்லாஹ் தனது தூதர் முஹம்மத் (ஸல்) அவர்களை நோக்கி, அலீயை அடுத்த தலைவராகப் பிரகடனப்படுத்துமாறும், அதைச் செய்யவில்லையெனில் இஸ்லாம் பரிபூரணமடையாது என்றும் கட்டளையிட்டான். இஸ்லாத்தின் பரிபூரணத்துவம், அலீயின் இமாமத்தைப் பகிரங்கப்படுத்துவதிலும், இமாம் அலீயை அடுத்த தலைவராக நியமிப்பதிலுமே தங்கியுள்ளது என்பதை அல்லாஹ் தெளிவுபடுத்தினான்.

இதனால்தான், இமாமத் எனும் தலைமைத்துவம், இஸ்லாத்தின் அடிப்படை விடயம் எனுமளவு மிக முக்கியமான அம்சமாக அறிஞர்களால் கணிக்கப்படுகின்றது. அதேவேளை, நபியவர்கள், இமாமத் எனும் இம்முக்கிய விடயத்தைப் பகிரங்கப்படுத்துவதன் மூலம் மனிதர்கள் தம்முடன் முரண்படக்கூடும் என அஞ்சியிருந்தார்கள். இந்த அச்சத்தைக் களையவே அல்லாஹ், இவ்வாறு நபியவர்களுக்கு பாதுகாப்பு உறுதியளித்தான்.

*நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: "அல்லாஹ்வின் புறமிருந்து ஜிப்ரீல் (அலை) அவர்கள் என்னிடம் வந்து, 'அலீயை தங்கள் பிரதிநிதியாகவும், இமாமாகவும், தங்களுக்குப் பின் இச்சமுதாயத்தின் தலைவராகவும் நியமித்து அதனை மக்களுக்கு மத்தியில் பகிரங்கப்படுத்துமாறு அல்லாஹ் கட்டளையிட்டுள்ளான்' எனக் கூறினார்கள். அதற்கு நான், 'இவ்விடயத்தை இப்போது கூற முடியாதுள்ளது. ஏனெனில், இப்போது இறையச்சமுள்ள நல்லோர் குறைவாகவும், என்னை விமர்சித்துப் பேசுவோர் அதிகமாகவும் உள்ளனர். அலீ என்னுடன் நெருக்கமாக இருப்பதனால், அவருடன் பொறாமை கொண்டுள்ளனர். அவருக்கு 'செவி' என்று பட்டப்பெயரும் சூட்டியுள்ளனர்' என்று நான் கூறினேன். இதனை அல்லாஹ்வும் தனது திருமறையில் இவ்வாறு குறிப்பிடுகின்றான்: "அவர்களில் சிலர் நபியை துன்புறுத்துகின்றனர். இன்னும் அந்த மனிதரை 'செவி' என்று கூறுகின்றனர். (நபியே!) நீர் கூறுவீராக; அவர், உங்கள் நன்மையின் செவியாக இருக்கின்றார்" எனவே, நான் விரும்பியிருந்தால் அலீயை மனிதர்களுக்கு அறிமுகப்படுத்தி, அவர்களது பெயரையும் குறிப்பிட்டிருப்பேன். ஆனால், இந்த விடயத்தை அவர்களது நலனைக் கருத்திற் கொண்டு பகிரங்கப்படுத்தாமல் வைத்துள்ளேன். எப்படியிருந்தும் அலீயினுடைய விடயத்தை பிற்போடுவதை அல்லாஹ் விரும்பவில்லை. எனவே, மனிதர்களே! தெரிந்து கொள்ளுங்கள்; அலீயை (எனக்குப் பின்) உங்களது பிரதிநிதியாகவும் இமாமாகவும் பிரகடனம் செய்கின்றேன். அவரைப் பின்பற்றுவதையும் உங்களுக்குக் கடமையாக்குகின்றேன்"*

*(ஹாபிழ் இப்னு ஜரீர் அத்தபரீ, கிதாபுல் விலாயத்)*

*(சுயூதி, அத்துர்ருல் மன்தூர், பாகம்:3 பக்:117)*

*"மனிதர்களின் தீங்குகளிலிருந்து அல்லாஹ் உங்களைப் பாதுகாப்பான்" என்ற அல்லாஹ்வின் உறுதிமொழி கிடைக்கப்பெற்றதும், நபி (ஸல்) அவர்கள் தாமதமின்றி, அல்லாஹ்வின் கட்டளையை நிறைவேற்றத் துணிந்தார்கள். தமக்குப் பின் முஸ்லிம் சமூகத்தின் தலைவராக அலீயை பிரகடனப்படுத்தினார்கள். அவருக்கு வாழ்த்துத் தெரிவிக்குமாறு ஸஹாபாக்களைக் கேட்டுக் கொண்டார்கள். ஸஹாபாக்களும் வாழ்த்துத் தெரிவித்தார்கள். அதற்குப் பிற்பாடுதான், "இன்றைய தினம் உங்களுக்காக உங்களது மார்க்கத்தைப் பரிபூரணப்படுத்தி விட்டேன்" என்ற அல்குர்ஆன் வசனம் இறங்கியது.*

"தூதரே! உம்முடைய இறைவனிடமிருந்து உம்மீது இறக்கி வைக்கப்பட்டவற்றை (மக்களுக்கு) எத்தி வைப்பீராக. நீர் அதனை செய்யாவிடில் அவன் வழங்கிய தூதுத்துவப் பொறுப்பை நிறைவேற்றியவராகமாட்டீர்" என்ற வசனம் ஹஸ்ரத் அலீயின் இமாமத்தை பகிரங்கப்படுத்துமாறு நபியவர்களுக்கு அல்லாஹ்வினால் வழங்கப்பட்ட கட்டளையையே குறித்து நிற்கின்றது என்பதை அஹ்லுஸ்ஸுன்னாக்களிலுள்ள சில அறிஞர்களும் ஏற்றுக் கொண்டுள்ளனர். அது தொடர்பாக இப்னு மஸ்ஊத் கூறியதாக இப்னு மர்தவிய்யா அறிவிக்கின்றார்:

"நாங்கள், நபிகளாரின் காலத்தில் மேற்படி அல்குர்ஆன் வசனத்தை இவ்வாறு ஓதிவந்தோம்; "தூதரே! உம்முடைய இறைவனிடமிருந்து (அலீதான் முஃமின்களின் தலைவர் என) உம்மீது இறக்கி வைக்கப்பட்டதை (மக்களுக்கு) எத்தி வைப்பீராக. நீர் அதனை செய்யாவிடில் அவன் வழங்கிய தூதுத்துவப் பொறுப்பை நிறைவேற்றியவராகமாட்டீர். நிச்சயமாக அல்லாஹ் மனிதர்களின் தீங்குகளிலிருந்து உங்களைப் பாதுகாத்துள்ளான்"

(பத்ஹுல் கதீர் ஷௌகானீ, பாகம்:3 பக்:57)

(ஜலாலுத்தீன் சுயூதி, துர்ருல் மன்தூர், பாகம்:3 பக்:117)

மேற்படி அறிவிப்புகள், மற்றுமுள்ள ஆதாரங்களின் அடிப்படையில், அல்லாஹ், நபி (ஸல்) அவர்களுக்கு வழங்கிய தூதுத்துவமான இஸ்லாத்தை இமாமத் எனும் தலைமைத்துவத்தின் மூலம் பூரணப்படுத்தியுள்ளான் என்பது தெளிவாகின்றது. அதனால்தான் இமாமத்தானது, மார்க்கத்தில் ஈமான் கொள்ள வேண்டிய அடிப்படை அம்சமாக அமைகின்றது. அந்த இமாமத், ஹஸ்ரத் அலீ அவர்களிலிருந்து ஆரம்பமாகின்றது. அல்லாஹ், ஹஸ்ரத் அலீயின் இமாமத்தைக் கொண்டே முஸ்லிம்கள் மீது தனது அருட்கொடைகளைப் பூர்த்தி செய்துள்ளான். இதுவே இமாமிய்யாக்களின் கோட்பாடாகும்.

இந்த தலைமைத்துவ ஏற்பாடுகள் அல்லாஹ்வின் கட்டளைகளாகும். மனிதர்கள், தமது மனோ இச்சைகளைக் களைந்து, இறை கட்டளைக்கேற்ப வாழும் பயிற்சியைப் பெறுவதற்கான வழிகாட்டுதலுக்காகவே அல்லாஹ் இவ்வாறான தலைமைத்துவத்தை ஏற்படுத்துகின்றான். அந்த தலைமைத்துவத்தை வகிக்கும் இமாம்,

எவ்வித அழுக்குகளும், வழிகேடுகளுமற்ற பரிசுத்தமான ஆன்மாவாக இருக்க வேண்டுமென அவன் வலியுறுத்தியுள்ளான்.

அத்தகைய இமாமாகவே அல்லாஹ் ஹஸ்ரத் அலீ அவர்களை நிலைப்படுத்தினான். நபி (ஸல்) அவர்களின் மூலம் அலீக்கு அறிவையும் ஞானத்தையும் கற்பித்து, நபிகளாரின் பிரதிநிதியாக அவரை உயர்த்தினான். ஆகவே, முஸ்லிம்கள் அல்லாஹ்வின் கட்டளைகளை ஏற்று, அவன் முன்னால் அடிபணிவது அவசியமாகும். அவனால் நியமிக்கப்பட்ட தலைமைத்துவத்தை மட்டுமே மனிதர்கள் ஏற்றுப் பின்பற்ற முடியும். இந்த தலைமைத்துவ விவகாரத்தில், இறைகட்டளைக்கு முரணாக, மனித ஆலோசனைகளுக்கு இடமளிப்பது பாவமான செயலாகும்.

அல்லாஹ் திருமறையில் குறிப்பிடுகின்றான்;

وَرَبُّكَ يَخْلُقُ مَا يَشَآءُ وَيَخْتَارُ مَا
كَانَ لَهُمُ الْخِيَرَةُ سُبْحٰنَ اللّٰهِ وَتَعٰلٰى عَمَّا يُشْرِكُوْنَ ﴿٦٨﴾ وَرَبُّكَ يَعْلَمُ
مَا تُكِنُّ صُدُوْرُهُمْ وَمَا يُعْلِنُوْنَ ﴿٦٩﴾ وَهُوَ اللّٰهُ لَآ اِلٰهَ اِلَّا هُوَ لَهُ
الْحَمْدُ فِى الْاُوْلٰى وَالْاٰخِرَةِ وَلَهُ الْحُكْمُ وَاِلَيْهِ تُرْجَعُوْنَ ﴿٧٠﴾

"மேலும் உமதிரட்சகன் தான் நாடியவற்றைப் படைக்கின்றான். (தன்னுடைய தூதுத்துவப் பணியை நிறைவேற்றும் தலைவராக தான் விரும்பியவர்களைத்) தேர்ந்தெடுக்கின்றான். (இமாமைத் தேர்ந்தெடுக்கும் சுய) தெரிவுரிமை மனிதர்களுக்கில்லை. அல்லாஹ் மிகப் பரிசுத்தமானவன். இன்னும், அவர்கள் இணைவைப்பதை விட்டும் அவன் மிக்க உயர்ந்தவன். உமது இறைவன் அவர்களுடைய நெஞ்சங்கள் மறைத்து வைத்திருப்பவற்றையும் வெளிப்படுத்துபவற்றையும் நன்கறிவான். அவனே அல்லாஹ் அவனைத் தவிர வேறு நாயன் இல்லை. இம்மையிலும் மறுமையிலும் புகழ் அவனுக்கே உரியது. அதிகாரமும் அவனுக்கே உரியது. ஆதலால் நீங்கள் அவன் பக்கமே கொண்டு வரப்படுவீர்கள்"

(சூரா கஸஸ்: 68-70)

*நபி (ஸல்) அவர்கள், கதீர் தினத்தை பெருநாளாகப் பிரகடனப்படுத்தியுள்ளார்கள் என்பது இதிலிருந்து தெளிவாகின்றது ஏனெனில், இமாம் அலீயை முஃமின்களின் தலைவராகப் பிரகடனப்படுத்திய பின்பே, இஸ்லாம் பூரணமடைந்து விட்டது என்ற அல்குர்ஆன் வசனம் இறங்கியமை குறிப்பிடத்தக்கது. அப்பிரகடனத்தின் பின் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: "எனது தூதுத்துவத்தையும் எனக்குப் பின்னால் அலீயின் தலைமைத்துவத்தையும் பொருந்திக் கொண்டு மார்க்கத்தைப் பரிபூரணப்படுத்தி, அருட்கொடைகளையும் முழுமையாக்கிய அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும்"*

*இவ்வாறு அல்லாஹ்வைப் புகழ்ந்த நபியவர்கள், அலீ அவர்களுக்கு பொதுமக்கள் வாழ்த்துச் சொல்வதற்கு வசதியாக ஓரிடத்தைத் தயார் செய்து, அவர்களை அங்கு அமர்த்தி, அவர்களுக்கருகில் தாமும் அமர்ந்து கொண்டார்கள். ஸஹாபாக்கள் அனைவரும் முன்வந்து இமாம் அலீக்கு வாழ்த்துத் தெரிவித்தனர்.*

*அபூபக்கர், உமர் போன்றோர் முந்திக் கொண்டு இமாம் அலீயை வாழ்த்தினர். அலீயைப் பார்த்து அவர்களிருவரும் இவ்வாறு கூறினர்; "வாழ்த்துக்கள், வாழ்த்துக்கள். இன்று நீங்கள் எங்கள் தலைவராகவும், முஃமினான ஆண்கள், பெண்கள் அனைவருக்கும் தலைவராகவும் ஆகிவிட்டீர்கள்"*

*ஹஸ்ரத் அலீ அவர்கள், நபிகளாருக்குப் பின் தலைமைத்துவப் பொறுப்பில் இமாமாகப் பிரகடனப்படுத்தப்பட்ட விடயத்தை அறிந்த அக்கால புகழ் பெற்ற கவிஞர் ஹஸ்ஸான் பின் தாபித், அது தொடர்பாக மிக அழகான பாடலை, நபிகளாரின் அனுமதி பெற்றுப் பாடினார். பிரபல்யமான அப்பாடலில் ஒரு வரி இவ்வாறு அமைந்திருந்தது:*

*"கதீருடைய தினத்தில் கும் எனுமிடத்தில் அவர்களது நபி அவர்களை அழைத்தார். எனவே, நபியின் அழைப்பை உற்சாகத்துடன் செவிமடுப்பீராக"*

*ஹாகிம் ஹஸ்கானி தனது தப்ஸீரிலும், ஹாபிழ் அபூநயீம் தனது, 'மா நஸல மினல் குர்ஆன் ஃபீ அலீ' எனும் நூலிலும் இச்சம்பவத்தை குறிப்பிட்டுள்ளனர்.*

நபி (ஸல்) அவர்கள், அல்லாஹ்வின் கட்டளைப் பிரகாரம், தமக்குப் பின் முஸ்லிம் சமூகத்தின் தலைவர் யாரென்பதை தெளிவாக அடையாளப்படுத்தி விட்ட பின்னரும், மனிதர்களிடையே சில முரண்பாட்டுணர்வுகள் தலைதூக்கியிருந்தன.

குறிப்பாக, குறைஷி குலத்தைச் சேர்ந்தோர் இவ்விடயத்தில் பகிரங்கமாகவே தமது உடன்பாடின்மையை வெளிப்படுத்தத் தலைப்பட்டனர்; ஹாஷிம் குலத்தினர் மீது பொறாமை கொண்டார்கள். நபி (ஸல்) அவர்கள் ஹாஷிம் குலத்தைச் சேர்ந்தவர்கள். இமாம் அலீ அவர்களும் ஹாஷிம் குலத்தைச் சேர்ந்தவர்கள். எனவே நுபுவ்வத்தும், அதன் பின் இமாமத்தும் ஹாஷிம் குலத்தவரிடமே இருப்பதையிட்டு குறைஷியர் காழ்ப்புணர்ச்சி கொண்டனர்.

குறைஷி குலத்தவரான உமர் பின் கத்தாபுக்கும், ஹாஷிம் குலத்தவரான அப்துல்லாஹ் பின் அப்பாஸுக்கும் இடையில் இவ்விடயம் தொடர்பாக வாய்த்தர்க்கமொன்றும் இடம்பெற்றது. அதில், உமர் பின் கத்தாப், குறைஷிகளின் கருத்தைப் பிரதிபலித்தவாறு அப்பாஸுடன் வாக்குவாதத்தில் ஈடுபட்டார் என வரலாற்றாசிரியர்கள் எழுதியுள்ளனர்.

*(தாரீஹ் தபரி, பாகம்:4 பக்:223)*

*(தாரீஹ் அபீ அஸீர், பாகம்:3 பக்:63)*

*(ஷரஹ் நஹ்ஜுல் பலாஃகா, பாகம்:2 பக்:18)*

இத்தகைய முரண்பாட்டுணர்வுகளின் காரணமாக, நபிகளாருக்குப் பின் முஸ்லிம்களின் தலைவர் இமாம் அலீ என்ற விடயம் பிரகடனப்படுத்தப்பட்ட தினத்தை ஞாபகமூட்டவோ, நன்னாளாகக் கொண்டாடவோ முடியாது போய்விட்டது.

ஏனெனில், இமாம் அலீ அவர்களின் பதவிப் பிரமாணம் நடந்து இரு மாதங்களுக்குள், பதவி மோகம் கொண்டிருந்த விரோதிகள் ஒருவித அச்சத்தையும் பயத்தையும் மக்களிடையே ஏற்படுத்தி, ஹஸ்ரத் அலீயின் இமாமத் விவகாரத்தை மக்களது சிந்தனையிலிருந்து அகற்றிவிடவும், அதனை மறக்கடிக்கச் செய்யவும் மிகவும் பிரயத்தனம் எடுத்துக் கொண்டனர்.

ஹஸ்ரத் அலீயின் இமாமத்தை ஆதரிப்போர் பலமான எதிர்ப்புகளுக்கு முகங்கொடுக்க நிர்ப்பந்திக்கப்பட்டனர். அந்நிகழ்வு பற்றி பேசவும், கருத்துரைக்கவும் மக்கள் தயங்கினர். தமது உயிரையெண்ணி அஞ்சினர். இதனால், கதீருடைய நாளை ஞாபகமூட்டவோ, அந்நாளில் விழா எடுத்துக் கொண்டாடவோ யாருக்கும் தைரியமிருக்கவில்லை.

ஆனால், சுமார் கால் நூற்றாண்டுக்குப் பிறகு, ஏகோபித்த கருத்தின் பிரகாரம் இமாம் அலீ அவர்களுக்கு கிலாபத் வந்து சேர்கின்றது. நபிகளாருக்குப் பின் முதலாவது கலீபாவாக அல்லாஹ்வினால் நியமிக்கப்பட்ட இமாம் அலீ அவர்கள், மனிதர்களின் ஆலோசனையின் படி நான்காவது கலீபாவாக ஆட்சிப் பொறுப்பில் அமர்கின்றார்கள்.

தமது ஆட்சியில், மங்கி மறைந்து அழிந்து கொண்டிருந்த கதீர் உள்ளிட்ட இஸ்லாத்தின் அடிப்படை விடயங்களை இமாம் அலீ அவர்கள் மீண்டும் உயிர்ப்பிக்கத் தொடங்குகின்றார்கள். மக்களிடையே அவை பற்றிய விழிப்புணர்வைத் தோற்றுவிக்க முனைகின்றார்கள்.

ஒரு முறை, இமாம் அலீ அவர்கள், கதீர் நிகழ்வு குறித்து தம்முன் கூடியிருந்த மக்கள் மத்தியில் வினவினார்கள். ஸஹாபாக்களும் மற்றும் பலரும் அங்கு அமர்ந்திருந்தனர். அவர்களில், பத்ர் யுத்தத்தில் கலந்து கொண்ட 16 ஸஹாபாக்கள் உட்பட மொத்தம் 30 ஸஹாபாக்கள் அந்த நிகழ்வு நடந்ததையும் அதைத் தாம் கண்டதையும் உறுதிப்படுத்தி சான்று பகர்ந்தார்கள்.

(முஸ்னத் அஹ்மத், பாகம்:4 பக்:380)
(ஹஸாயிஸுந் நஸாஈ, பக்:96)
(கன்சுல் உம்மால், பாகம்:6 பக்:393)
(இப்னு கதீர், பாகம்:5 பக்:211)

இந்நிகழ்வில், வேறு சிலர், கதீர் நிகழ்வு குறித்து சாட்சி கூற மறுத்துவிட்டனர். தமது வயது முதிர்ச்சியையும் மறதியையும் அதற்குக் காரணமாகக் காட்டினர். அதில் மாலிக் பின் அனஸும் ஒருவராவார். பின்னாளில் அவர் தீராத நோயினால் பீடிக்கப்பட்டு மிகவும் சிரமத்திற்கு உள்ளானார். தனது மரணத் தறுவாயில் அவர் கூறினார்; "அந்த நல்ல இறையடியாரின் அழைப்பை ஏற்று சாட்சியளிக்க மறுத்த காரணத்தினால்தான் நான் இந்த நோய்க்கு ஆளாக்கப்பட்டுள்ளேன்"

*(தாரீஹ் இப்னு கதீர், பாகம்:5 பக்:26)*
*(முஸ்னத் அஹ்மத், பாகம்:1 பக்:119)*

அன்று, இமாம் அலீ அவர்கள், கதீர் நிகழ்வு குறித்து அறியாதிருந்த மக்களுக்குத் தெளிவுபடுத்தினார்கள். அதனை மகிழ்ச்சிக்குரிய ஒரு தினமாகவும் பிரகடனம் செய்தார்கள். அன்றிலிருந்து, கதீர் நிகழ்வை முக்கிய பெருநாளாகக் கொண்டாடிச் சிறப்பிக்கும் வழக்கம் முஸ்லிம்களிடையே, குறிப்பாக அஹ்லுல்பைத் நேசர்களிடையே நடைமுறைக்கு வந்தது.

அஹ்லுல்பைத் நேசர்கள், கதீர் நிகழ்வு இடம்பெற்ற நாளை மிக முக்கியமான ஒரு நாளாகக் கருதுகின்றனர். அல்லாஹ்வினால் உத்தரவாதம் அளிக்கப்பட்டு, அருட்கொடைகள் முழுமையாக்கப்பட்டு, இஸ்லாம் எங்களது மார்க்கமாக ஏற்றுக் கொள்ளப்பட்ட அத்தினம் ஏன் எமது பெருநாளாக இருக்க முடியாது.

நிச்சயமாக அத்தினம் அல்லாஹ்விடத்திலும் அவனது தூதரிடத்திலும் முஃமின்களிடத்திலும் மகத்துவமிக்க ஒரு தினமாகவே இருந்து வருகின்றது.

அபூஹுரைரா கூறியதாக அஹ்லுஸ்ஸுன்னா அறிஞர்கள் பலர் கூறியிருப்பதாவது; "நபி (ஸல்) அவர்கள், அலீயின் கரத்தைப் பிடித்து உயர்த்தி, 'நான் யாருக்கெல்லாம் தலைவராக இருந்தேனோ, அவர்களுக்கெல்லாம் இனி அலீயே தலைவராவார்' எனக் கூறியபோதுதான், 'இன்றைய தினம் உங்களுக்காக உங்களது மார்க்கத்தை நான் பரிபூரணப்படுத்தி விட்டேன்' என்ற அல்குர்ஆன் வசனம் இறங்கியது. அது துல்ஹஜ் 18ஆம் நாள் கதீர்கும் எனுமிடத்தில் இடம்பெற்றது. எனவே, இத்தினத்தில் எவரேனும் நோன்பு நோற்றால் அல்லாஹ் அவருக்கு அறுபது வருடங்கள் நோன்பு நோற்ற நன்மையை வழங்குகின்றான்"

*(இப்னு கதீர், அல்பிதாயா வந்நிஹாயா, பாகம்:3 பக்:214)*

அஹ்லுஸ்ஸுன்னாக்களிடம் இந்நிகழ்வு குறித்த ஹதீஸ்கள், மறைக்கப்பட்டவை போக எஞ்சியவை சொற்பமாகவே உள்ளன. ஆனால், இமாமிய்யாக்களிடத்தில் இந்நிகழ்வு தொடர்பாக ஏராளமான

ஹதீஸ்கள் உள்ளன. அவற்றின் எண்ணிக்கையும் அமைப்பும் கதீர் நிகழ்வின் உண்மைத்துவத்தையும் அதன் இஸ்லாமிய அடிப்படை நிலையையும் வலியுறுத்துபவையாக அமைந்துள்ளன.

ஆகவே, ஹஸ்ரத் அலீ அவர்கள், நபிகளாருக்குப் பின் இமாமாக நியமிக்கப்பட்டு பிரகடனப்படுத்தப்பட்ட துல்ஹஜ் 18ஆம் நாளை ஞாபகப்படுத்தி, நபி (ஸல்) அவர்கள் வாரிசுச் சொத்தாக விட்டுச் சென்ற மாபெரும் பொக்கிஷங்களான அல்குர்ஆன் அஹ்லுல்பைத் இரண்டையும் எமது வாழ்வின் வழிகாட்டிகளாக எடுத்து வாழ முயற்சிப்போமாக.